8th September 1960] [Mr. Speaker]

is equal to the number of vacancies to be filled, viz., THREE, I declare the following three candidates to have been duly elected to the Madras Land Improvement Board :—

(1) Sri K. S. Ardhanareeswara Gounder.

(2) Sri D. Dasarathan; and

(3) Sri G. Vagheesam Pillai.

## V.—GOVERNMENT MOTION.

### Draft Outline of the Third Five-Year Plan.

Mr. SPEAKER : We will now proceed with the discussion on the Draft Outline of the Third Five-Year Plan. Yesterday it was decided that Sri Annadurai and Sri V. K. Ramaswami Mudaliyar will speak to-day and then the Hon. Leader of the House would reply. But to-day in view of the one hour that was allotted for the consideration of privilege motion being not fully utilized and having saved some time thereby, I will now allow Sri Pakkirisami Pillai and the Deputy Leader of the I.N.D.C. also (these two hon. Members only) to speak to-day.

Sri A. GOVINDASAMY : One member from our Party may also be allowed to speak to-day.

Mr. SPEAKER : Sri Pakkirisami Pillai is the leader of a party. Sri Sasivarna Thevar is the Deputy Leader of another party. I have said that I will allow only these two hon. Members to speak to-day in addition to Sri Annadurai, Sri V. K. Ramaswamy Mudaliyar and the Hon. Leader of the House.

Sri P. G. KARUTHIRUMAN : One member from our Party may be allowed to speak.

Mr. SPEAKER : I have said that I will allow only leaders of parties and Deputy Leaders of parties. Have you got a Deputy Leader for your party? If there is one I will allow him to speak. (Laughter.) The hon. Member Sri Sasivarna Thevar may now speak.

Sri T. L. SASIVARNA THEVAR : கனம் சபாநாயகர் அவர்களே, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை இந்த சபையின் முன் வைத்து கனம் நிதி அமைச்சர் அவர்கள் பேசிய பேச்சின் மீது சில கருத்துக்களை சொல்ல நான் ஆசைப்படுகிறேன். முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் சுமார் 80 கோடி ரூபாயும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சுமார் 189 கோடி ரூபாயும் செலவு செய்யப்பட்டிருக்கிறது என்று நான் நினைக்கிறேன். இரண்டுக்குமாகச் சேர்ந்து சுமார் 270 கோடி ரூபாய் ஆகியிருக்கிறது. இப்போது வரக்கூடிய மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு சற்றேறக்குறைய 400 கோடி ரூபாய் ஆகும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. சென்ற இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களின் மூலமாக மக்களுக்கும், நாட்டுக்கும் என்ன நன்மைகள் எல்லாம் கிடைத்திருக்கின்றன என்பதை கொஞ்சம் பரிசீலனை செய்து பார்த்து, அதிலுள்ள கஷ்ட நஷ்டங்களை எல்லாம் கணக்கெடுத்துப் பார்த்து, அவைகளை எல்லாம் பரிசீலனை செய்த பிறகு இந்தத் திட்டத்தைப் போட்டிருந்தால் நன்றாக இருக்கும். சென்ற திட்டங்

[Sri T. L. Sasivarna Thevar] [8th September 1960

களால் நாட்டுக்கு ஏற்பட்ட நன்மை என்ன, அதன் மூலமாக நாட்டிலுள்ள இன்றைய நிலைமை என்ன என்பதைப் பார்த்தால் இன்றைக்கு நாட்டில் எல்லாப் பொருள்களின் மீதும் விலைவாசி அதிகமாக ஏறிப்போயிருக்கிறது. குறிப்பாக உணவுப்பொருட்களின் மீது அதிகமாக விலையேற்றம் ஏற்பட்டிருக் கிறது. இதை நாம் எல்லோரும் ஒப்புக்கொள்கிறோம். அதற்குக் காரணம் என்னவென்றால் பண மலிவு தான் (இன்ஃப்லேஷன்). பண மலிவு ஏற்படுவது நாட்டுக்கு நல்லதல்ல. பண மலிவு அதிகமாக ஏற்படுவதற்கு காரணம் நம்மிடம் திட்டமிட்ட பொருளாதாரம் இல்லை என்பதுதான் என்று பல அரசியல் அறி ர்கள் கூறுகிறார்கள். நிதி அமைச்சர் அவர் கள் இந்தப் பிளானைப் பற்றிக் குறிப்பிட்டுப் பேசுகையில், ஏரோப்ளேனி லுள்ள "டேக் ஆஃப்" முறையைப்போல் நமது திட்டத்தையும் நடத்த வேண்டும் என்று குறிப்பிட்டார்கள். டேக் ஆஃப் ஸ்டேஜ் இருந்தால்தான் ஏரோப்ளேன் மேலே நன்றாக பறந்து போக முடியும், அதே போல் தான் நமது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டமும் மேல் நோக்கி செல்ல வேண்டும் என்று கருத்தைத் தெரிவித்தார்கள். நான் குறிப்பிட விரும்பு வது ஏரோப்ளேன் போன்ற நமது திட்டம் ஒழுங்காக மேலேப் போய் சேருமா என்பது தான். அப்படி ஒழுங்காகப் போய் சேராது என்பதுதான் என் அபிப்பிராயம், காரணம் அதற்குள்ள பண வசதி நம்மிடம் இல்லை . . . . . . . . . . . . . . . .

**Mr. SPEAKER :** குறுக்கிடுவதற்கு மன்னிக்கவும், உங்களுக்கு 20 நிமிடநேரம் பேசுவதற்கு கொடுக்கிறேன், திரு. பக்கிரிசாமிப் பிள்ளை அவர்களுக்கு 25 நிமிட நேரம் கொடுக்கிறேன்.

**Sri T. L. SASIVARNA THEVAR :** நன்றி. நமக்கு வேண்டிய பணத்திற்கு இப்போதுள்ள நிலையில் நாட்டு மக்கள் மீது இன்னும் வரியை போட முடியாது. ஆகவே தான் போதிய சக்தி இல்லாமல் மேலே பறந்து போக முடியாமல் கீழே விழுந்து விட வேண்டிய நிலைமை ஏற்படும் என்று பல அரசியல் அறிஞர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். காங்கிரஸ் கட்சியைப் பொறுத்தவரையில் ஒழுங்காக நல்ல முறையில் மேலே போய் சேரமுடியும் என்று தெரிவிக்கிறார்கள். . .

ஆனால் இரண்டு திட்டத்தின் நடவடிக்கைகளையும் அனுபவத்தில் வைத்துப் பார்க்கும்போது முன்னால் சொன்ன அபிப்பிராயம்தான் நிறை வேறுமோ என்று நான் அபிப்பிராயப்படுகிறேன். இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களினால் ஏற்பட்ட நன்மை, லாபம் எல்லாம் எங்கே போய்ச் சேர்ந்தன என்று கண்டுபிடிக்கப்படவில்லை. அதைப்பற்றி ஆராய ஒரு ஆராய்ச்சிக் குழு ஏற்பாடு செய்து அதைப் பரிசீலிக்க வேண்டும். நம் முடைய முதலமைச்சர் கூட இதைப் பற்றிப் பேசியிருக்கிறார். இந்தச் சூழ்நிலையில், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டங்களுக்குச் செலவிடப் பட்ட பணம் ஒழுங்காகச் செலவிடப்பட்டிருக்கிறதா என்பது பரிசீலிக்கப்பட்ட பிறகு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை ஓரிரண்டு ஆண்டுகள் கழித்து ஆரம்பித்தால் என்ன ? ஜில்லாவாரியாக நடந்த சில காரியங்களைப் பற்றி என்றால் சொல்ல முடியும். பல காரியங்களுக்கு ஒதுக்கப்பட்ட பணம் ஆங்காங்கு ஜில்லா சம்பந்தப்பட்ட மட்டில் செலவழிக்கப்படவில்லை என்ப தற்கு சாட்சியங்கள் இருக்கின்றன. சென்ற கூட்டத்திலும், இந்தக் கூட்டத் திலும் ஸ்ரீ என். ஆர். தியாகராஜன் அவர்கள் இது பற்றிய கேள்விகளைக் கேட்டு வருவது உங்களுக்குத் தெரியும். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் எங்கள் பகுதியில் இவ்வளவு ஆஸ்பத்திரிகள் திறக்கப் படும் என்று கூறப்பட்டிருக்கிறதே, இதுவரை ஒன்று கூடத் திறக்கப்படாத தற்குக் காரணம் என்ன என்று அவர் கேட்டார். அதே போல் இரண்டா வது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ்ப் பல குளங்கள் வெட்டப்படும் என்று சொல்லப்பட்டு இதுவரை ஒரு குளம் கூட வெட்டப்படாததன் காரணம் என்ன என்று கேட்டார். இந்த முறையில் அவர் ஐந்தாறு கேள்விகள் கேட்டார். சமீபத்தில்கூட டெவலப்மெண்ட் கவுன்சில் கூட்டம் நடந்தது. அந்தக் கூட்டத்திற்கு நான் சென்றிருந்தேன். அந்தக் கூட்டத்தில், தர வாரியாக ஒவ்வொரு இலாகாவுக்கும் செலவழிக்கப்படவில்லை என்று கூறப் பட்டதே தவிர அதற்கான காரணம் என்ன என்று கூறவில்லை. இரண்டு லட்சம் ரூபாய் செலவழிக்கத் திட்டமிடப்பட்டிருக்கும் உத்தியோகஸ்தர்

களைக் கேட்டால் பணம் அப்படியே இருக்கிறது என்று சொல்வார்கள். விவசாயக் கடன் என்று விவசாயிகளுக்குக் கடன் கொடுக்கத் திட்டமிட்டிருக்கிறோம். கிணறு வெட்டுவது, விதைகள் வாங்குவது ஆகிய காரியங்களுக்காகக் கொடுக்கப்படக் கூடிய கடன் அது. அவை பூராவும் கிராம மக்களுக்குப் பயன் அளித்திருக்கிறதா ? அந்தக் கிராம மக்களிடம் வசதி இல்லை. அந்தக் கடனை வாங்கவேண்டுமென்றால் அதிகச் செலவாகிறது. அதற்காக "சால்வன்சி சர்டிபிகேட்" "என்கம்ரன்ஸ் சர்டிபிகேட்" கொடுத்தால்தான் கடன் கிடைக்க முடியும். அதனால் யாரும் கடனை வாங்க முடியாமல் இருக்கிறது. அதற்காக ஒதுக்கப்பட்ட பணமானது அப்படியே இருக்கிறது. இதில் உத்தியோகஸ்தர்கள் மேல் குற்றம் சொல்வதற்கில்லை இந்த மாதிரியாக எந்த இலாகாவை எடுத்துக் கொண்டாலும் கண்டிப்பான முறையில் செலவு செய்யப்படவில்லை. உதாரணத்திற்கு ஒன்று சொல்வேன்.

எங்கள் பகுதியில் இரண்டு கோழிப்பண்ணைகள் நடத்தப்பட்டு வந்தன. இன்று அதன் கட்டிடங்கள் கூட இடிந்து கிடக்கின்றன. பேரையூரில் ஒரு பண்ணை வைத்தார்கள். அந்தப் பண்ணைக்கு 400 கோழிகள் வாங்கிக் கொடுக்கப்பட்டன. அந்த 400 கோழிகளில் இன்று 43 கோழிகள்தான் மிச்சமிருக்கிறது. இதுபற்றி வெடரினரி டாக்டர், நோயின் காரணமாக அத்தனை கோழிகளும் இறந்து போய் விட்டதாகச் சொல்கிறார். (கனம் ஸ்ரீ கே. காமராஜ் : சாப்பிட்டு விட்டு இறந்து போய்விட்டதாகச் சொல்லலாம்) கனம் முதலமைச்சர் அவர்கள் சொல்வது ஒரு காரணமாக இருக்கலாம். எங்கள் பகுதியில் ஆட்டுப் பண்ணை ஒன்று வைத்தார்கள். அந்த ஆடுகளில் சில இறந்து விட்டன. (கனம் ஸ்ரீ சி. சுப்பிரமணியம் : மனிதன் சாப்பிடாததை வைத்தால்தான் இராமநாதபுரத்தில் நிற்கும் போல் தெரிகிறது). அந்த வகையில் உங்களுடைய ஆட்கள் சாப்பிட்டதைக் காண ரொம்ப சந்தோஷம். அங்கு 4, 5 ஆடுகள் சீக்குப் பிடித்துச் செத்து விட்டதாகச் சொல்கிறார்கள். செத்த ஆடுகளைப் போஸ்ட் மார்ட்டம் பண்ணியதாகச் சொல்கிறார்கள். இந்தமாதிரி பொதுவாக எதை எடுத்துக் கொண்டாலும் எல்லாத் திட்டங்களும் பரிபூரணமாக நிறைவேற்றப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால் இந்த மாதிரி சிறிய அளவில் திட்டமிட்ட திட்டங்கள் சரியானபடி நிறைவேற்றப்படவில்லை. ஏதோ சில நீர்ப்பாசனத் திட்டங்கள் வேண்டுமானால் நிறைவேற்றப்பட்டிருக்கலாம். இந்தச் சிறிய திட்டங்களுக்கு ஒதுக்கப்பட்ட தொகைகள் பூராவும் தவறான முறையில் தான் செல்வழிக்கப்பட்டிருக்கின்றன.

சிறு தொழில்கள் சம்பந்தப்பட்ட மட்டில் பல ஊழல்கள் இருக்கின்றன. ஆயில் சொசைடி வைக்கிறார்கள். அதற்காகப் பணம் கொடுக்கிறார்கள். ஆனால் இது முன்னுக்கு வர முடியவில்லை. இயந்திரத்தோடு போட்டி போட முடியவில்லை. அதிலிருந்து கிடைக்கும் பிண்ணாக்கை விற்பதில் கூட நஷ்டந்தான் ஏற்படுகிறது. ஒன்று நஷ்டத்திற்கு ஓடுகிறது அல்லது தனிப்பட்டவர்களுக்குப் பயன்படுகிறது. இந்த மாதிரி நிலைமையை பூராவும் பரிசீலிக்க வேண்டும்.

நிதியமைச்சர் அவர்கள் மூன்றாவது திட்டக் காலத்தில் இதைக் காட்டிலும் விலை ஏறப்போகிறது என்பதைச் சூசகமாகத் தெரிவித்திருக்கிறார்கள். சம்பளத்தைக் கூட்டிக்கொடுத்தால் அந்த அதிகப்படி சம்பளத்தைச் சேமிப்புக்குக் கொடுத்து விட்டால் நலமாக இருக்குமென்ற கருத்தைத் தெரிவித்தார்கள். எங்கள் சம்பந்தப்பட்ட மட்டில் கூட, சட்டசபை மெம்பர்களுடைய சம்பளத்தை அதிகப்படுத்த வேண்டுமென்ற அபிப்பிராயம் இருக்கிறது. எங்களுக்கு 250 ரூபாயைக் கொடுத்து விட்டு 100 ரூபாயை எடுத்துக்கொண்டால் வலையில்லை. விலைவாசியைக் கட்டுப்படுத்தாமல் அதிகப்பணத்தைச் சேமிப்பில் போடவேண்டுமென்று சொல்வது சரியல்ல. பண வீக்கம் இருக்கும் வரையில் கண்டிப்பாக விலைவாசி ஏறத்தான் செய்யும். அதைப்பற்றிப் பல கருத்துக்கள் இருக்கின்றன. விலைவாசி குறைந்தால் குறைகிறதே என்று சில அங்கத்தினர்கள் சம்சாரிகளுக்காக அனுதாபப்படுகிறார்கள். விலைவாசி ஏறிவிட்டால் தொழிலாளர்களுக்குக் கஷ்டமாகிவிடுமே என்று சிலர் கஷ்டப்படுகிறார்கள். ஆனால் விலைவாசி

மட்டும் இறங்குவதாக இல்லை. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவடைந்த பிறகு விவசாயம் சம்பந்தப்பட்ட மட்டில் தன்னிறைவு ஏற்பட்டுவிடும் என்று சொல்கிறார்கள். நிச்சயமாக விலைவாசி குறையத்தான் வேண்டும். முதல் ஐந்தாண்டுத் திட்டத்திற்குப் பிறகு தன்நிறைவு பெற்றுவிடும் என்று மத்திய அரசாங்கத்தில சொன்னார்கள். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்குப் பிறகு தன்நிறைவு பெற்றுவிடும் என்று மத்திய அரசாங்கமும், சென்னை அரசாங்கமும் கூறியது. இப்போது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் நிறைவேற்றப்பட்டு முடிந்த பிறகு தன் நிறைவு பெற்றுவிடும் என்று சொல்கிறார்கள். ஒவ்வொரு முறையும் சொல்வது செயல்படாமல் இருக்கிறது என்று சொன்னால் எங்கோ ஏதோ கோளாறு இருக்கிறது என்றுதான் அர்த்தம். கோடானு கோடி ரூபாய் செலவழிக்கப்பட்டும் இப்போது தேசிய வருமானம் 17 சதவிகிதம் என்று குறிப்பிடுகிறார்கள். அரசாங்கம் கொடுக்கும் கணக்கை நான் நம்புவதில்லை. யார் அதைச் சரி பார்க்க முடியும். அரசாங்கக் கணக்கை எப்படித் தயார் பண்ணுகிறார்கள் என்பது எனக்குத் தெரியும். உங்கள் கிராமத்தில் எவ்வளவு கோழிகள் இருக்கிறது என்று கேட்டால் அதற்கான கணக்கை முன்சீப் கொடுக்க வேண்டியிருக்கிறது. அவர் ஒரு வெள்ளைக் காகிதத்தை எடுத்து 600 கோழிகள், 2,000 முட்டைகள் என்று ஏதோ கணக்குக் கொடுக்கிறார். அதை யார் "செக்" பண்ணப் போவது? (கனம் ஸ்ரீ சி. சுப்பிரமணியம் : 600 கோழிகளுக்கு ஒரு நாளைக்கு இரண்டாயிரம் முட்டைகளா ?) இன்றைய தேசிய வருமானம் 17 சதவிகிதம் என்பது உங்களுக்குப் பெரிய தோல்வி அல்லவா ?

ஏற்கனவே நீர்ப்பாசனம் சம்பந்தப்பட்ட மட்டில் பரிபூரணமாக கவனம் செலுத்தப்படவில்லை. வட்டார அபிவிருத்தித் திட்டங்களில் நிறைய ஊழல்கள் இருக்கின்றன. பணமும் நிறைய அனாவசியமாக, செலவழிக்கப்படுகிறது. ஒரு வகையில் திருப்திப்படலாம் அரசாங்கத்தில் உள்ளவர்கள். வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழித்து முடிந்த அளவு பல உத்தியோகஸ்தர்களையும் பல சிப்பந்திகளையும் நியமித்திருக்கிறோம். அவர்கள் சௌகரியமாக அனுபவித்துக்கொண்டிருக்கிறார்கள். ஒரு வேலையும் செய்யாமல் சம்பளம் வாங்கிக் கொண்டிருக்கும் உத்தியோகஸ்தர்கள் ப்ளாக்கிலே ஏராளமாக இருக்கிறார்கள். $4\frac{1}{2}$ மணிக்குமேல் ஜீப்பை எடுத்துக்கொண்டுபோய், "25 சத வீதம் தொகை கொடுத்தால் நல்லது. ரோடு போடலாம், ஆஸ்பத்திரி கட்டலாம்" என்று கிராமத்திலே சிலரை பார்த்துக் கேட்கிறார்கள். கொடுத்தால் பார்க்கிறார்கள், கொடுக்காவிட்டால் இந்த கிராமத்திற்கு செய்ய முடியாது என்று வந்து விடுகிறார்கள்.

கிராம சேவக்குகளைப் பற்றிச் சொல்லவேண்டுமானால், நான் பழைய குற்றசாட்டைத்தான் சொல்லவேண்டும். அவர்கள் பரிபூரணமாக கட்சி வேலையைச் செய்து வருகிறார்கள். அவர்கள் கட்சிப் பிரசாரத்திற்காக இருக்கிறார்களே தவிர, மக்களுடைய நன்மைக்காக இல்லை என்பதை நான் ஞாபகப்படுத்த விரும்புகிறேன்.

**SRI R. KRISHNASAMI NAIDU :** ஆட்சியினர் நிறைவேற்றும் திட்டங்களை மக்களுக்கு எடுத்துச் சொல்ல அவர்கள் கடமைப்பட்டவர்கள்.

**SRI T. L. SASIVARNA THEVAR :** அப்படி அவர்கள் செய்யவில்லை என்றுதான் நான் சொல்லுகிறேன்.

சபாநாயகர் அவர்களே, இந்த முறையிலே பார்த்தால், சென்ற இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களும் பரிபூரணமாக வெற்றியடையவில்லை என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் பரிபூரணமாக வெற்றி கிடைக்காது என்று தான் செல்வேன்.

நீர்ப்பாசனம் சம்பந்தப்பட்ட மட்டில், பெரும் அணைக்கட்டுத் திட்டங்கள் முடிந்து விட்டன. சிறிய நீர்ப்பாசன வேலைகளுக்கு நிறையப் பணம் ஒதுக்கி நிறைவேற்றுவதாகத் தோன்றுகிறது. பூராவும் நல்ல முறையில் செய்தால் நலமாக இருக்கும். இன்றைக்கு முடிந்த அளவு சமுதாயத்

8th September 1960]

திற்கு நேரடியாகச் செய்யக்கூடிய சில காரியங்களை மட்டும் செய்தால்கூட நிறைய பலன் கிடைத்துவிடும். இவ்வளவு பணம் வசூலிக்க வேண்டிய அவசியம் இல்லை. கஷ்டம் இராது. ஒரு கிராமம் சம்பந்தப் பட்ட மட்டில் வசதியான ரோடு, பள்ளிக்கூடம், குடி தண்ணீர் வசதிக்கான கிணறு, அதற்கு மேற்பட்டு அந்தக் கிராமத்தில் இஷ்டப்பட்டால் கடன் வசதிக்கான ஒரு சொஸைட்டி வைக்கலாம். இம்மாதிரி காரியங்களை மட்டும் கவனித்து விடுவோமானால், மற்ற காரியங்களை அளவுக்கு மீறிச் செய்யவேண்டியதில்லை. கோழிப் பண்ணை, ஆட்டுப் பண்ணை, எண்ணெய் சொஸைட்டி என்று இப்படி எக்கச்சக்கமாகச் செலவிடவேண்டிய காரியங் களைச் சுருக்கி, திட்டத்திற்குச் செலவு செய்தால் அனாவசியமான செலவுகளைக் குறைக்க முடியும்.

விவசாயம் சம்பந்தப்பட்ட மட்டில் பிரமாதமான உதவி செய்யப் பட்டிருக்கிறது என்பதாகக் கூறுகிறார்கள். என்ன உதவி செய்கிறார்கள்? விவசாயிகளுக்குப் பூராவும் கடன் கொடுத்திருக்கிறார்கள். காங்கிரஸ் ஆட்சிக்கு வந்த பிற்பாடு இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களையும் போட்ட பிற்பாடு ஏற்படக்கூடிய நிலைமை என்னவென்றால், மக்களை நிறைய கடன் காரர்களாக்கியிருக்கிறார்கள். இல்லை என்று சொல்ல முடியாது. கிணறு வெட்ட 250 ரூபாய் மான்யம் கொடுக்கப்படுகிறது. அது தவிர, எல்லா வசதியும் கொடுக்கப்படுகிறது. உரத்திற்குக் கடன், நிலத்தைச் சீர்திருத்த கடன் என்று இப்படி கடன் கடன் என்று கொடுத்து விவசாயி களைக் கடன்காரர்களாக்கியிருக்கிறார்களே தவிர, அவர்களுக்கு ஒன்றும் நல்லது செய்திருப்பதாக ஏற்படவில்லை.

என் தொகுதி சம்பந்தப்பட்ட மட்டில் ஒரு வார்த்தை சொல்கிறேன். கீழ் ராமநாதபுரம் பகுதியைப்பற்றி அமைச்சருடைய பிரசங்கத்தில் குறிப்பிட வேண்டிய நிலைமை ஏற்பட்டது. அங்கே மேலப் பெரியார் திட்டம் இருக்கிறது. அந்தத் திட்டத்தை நிறைவேற்றிக் கொடுக்கவேண்டு மென்று சென்ற சட்டசபைக் கூட்டத்தில் நீர்ப்பாசன மான்யம் சம்பந்தப் பட்ட விவாதத்தின்போது நான் கூறினேன். அன்றைய தினம் கனம் மராமத்து இலாகா அமைச்சர் கனம் திரு. கக்கன் அவர்கள் பேசும்போது, ரீஜினல் கவுன்சிலில் வைத்துப் பரிசீலனை செய்து, வேண்டிய உதவி செய்வதாகச் சொன்னார்கள். சமீபத்தில் நடந்த ரீஜினல் கவுன்சில் கூட்டத்தில் அந்தத் தீர்மானம் கொண்டுவரப்படவில்லை என்பதை வருத்தத் துடன் நான் தெரிவித்துக் கொள்கிறேன். அது புறக்கணிக்கப்பட்டது.

அதே மாதிரி வைகையோடு இணைக்கப்பட்ட ஆறு என்னுடைய தொகுதியில் இருக்கிறது. கிருதமா நதி காலப்போக்கில் தூர்ந்து போய் வைகை நதிக்கு இருந்த இணைப்பு தூர்ந்து போய் விட்டது. அதை வெட்டிவிட்டால் மழை பெய்யும் காலத்தில் ஆற்றில் தண்ணீர் வரும். அந்தத் தண்ணீர் வைகையோடு சேர்ந்தால் அந்தப் பிராந்திய மக்களுக் குச் சற்றேறக்குறைய 100, 200 கிராமங்களுக்கு பாசன வசதி கிடைக்கும் என்பதை குறிப்பிட்டிருக்கிறேன். அதுவும் திட்டத்தில் சேர்க்கப்படவில்லை என்று வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். கிழக்கு ராமநாதபுரம் சம்பந்தப்பட்ட திட்டத்தில் வைகைநதியோடு தண்ணீர் வந்து சேரும் அளவுக்கு அந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதன் மூலமாக வைகைத் தண்ணீர் சேதப் படாமல் மிச்சப்பட்டுவிடும். ஆகவே, கிருதமா நதி, மேல பெரியார் திட்டத்தின் மூலம்தான் மேற்கொண்டு நன்மை கிடைக்க வசதி இருக்கிறது. அதற்கு முதல் இடம் கொடுக்கவேண்டுமென்ற வகையில் ஒரு திருத்தம் கொடுத் திருக்கிறேன்.

கைத்தொழிலில் மிகப் பிற்போக்கானது எங்களுடைய தொகுதி யாகும். அந்தத் தொகுதியிலே நூற்பு ஆலை வைக்கவேண்டுமென்ற அபிப்பிராயத்தை ஆறு மாதங்களுக்கு முன்னால் நம்முடைய கவர்னர் பெருமான் அந்தப் பக்கம் வந்த சந்தர்ப்பத்தில் ஒரு மகஜர் மூலமாகத் தெரிவித்தோம். அதைப்பற்றி கலெக்டரைக் கலந்து அவர்கள் பரிசீலனை செய்தார்கள். சர்க்காரிலிருந்து கிடைத்த பதில்—"ஸ்பிண்டில் ஜாஸ்தி

[Sri T. L. Sasivarna Thevar] [8th September 1960

யாகிவிட்டது, நீங்கள் கேட்டுக்கொண்ட கோரிக்கையின்படி நூற்பு ஆலை வைக்க இயலாது" என்று இருக்கிறதே தவிர, அதைப் பற்றி வேறு பதில் கொடுக்கவில்லை.

**THE HON. SRI K. KAMARAJ** : மூன்று ஆலைகள் வரப்போகின்றனவே.

**SRI T. L. SASIVARNA THEVAR** : சமீபத்தில்கூட, அமைச்சர் அவர்களுடைய நடவடிக்கை மூலமாகத் தெரிகிறது மூன்று ஆலைகள் அங்கு வரலாம் என்று. அப்படியானால் ரொம்ப சந்தோஷத்தோடு வரவேற்கத் தயாராக இருக்கிறேன். ஆனால், கூட்டுறவு முறையில் செய்யவேண்டுமென்ற அபிப்பிராயத்தைக் கூறுகிறார்கள்.

**THE HON SRI K. KAMARAJ** : தனிப்பட்டவர்களுக்கு அந்த "ஏரியா"வில் லைசென்ஸ் தருகிறார்கள்.

**SRI T. L. SASIVARNA THEVAR** : பண வசதி இல்லையே.

**THE HON SRI R. VENKATARAMAN** : கனம் அங்கத்தினர் அவர்களுக்கும் அந்தத் தொகுதி மக்களுக்கும் நான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். மூன்று ஆலைகளுக்கு அந்தப் பகுதியில் லைசென்ஸ் கொடுத்தாகி விட்டது என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன். தனிப்பட்டவர்களை, செய்யக்கூடியவர்களாகப் பார்த்து, நாங்கள் அங்கு அனுப்பி வைத்திருக்கிறோம்.

**SRI T. L. SASIVARNA THEVAR** : தனி நபர்கள் வேறு பிராந்தியத்தில் செய்யக்கூடியவர்களாகப் பார்த்து அனுப்பி வைத்திருப்பதாகச் சொல்கிறார்கள். அதை முதல் அமைச்சர் அவர்கள் சொல்லவில்லை.

**THE HON. SRI K. KAMARAJ** : நானே சொல்லுகிறேன்.

**SRI. T. L. SASIVARNA THEVAR** : அப்படியென்றால் ஆட்சேபணை இல்லை. அங்கே எந்த விதத்தில் வருவதாக இருந்தாலும் சரி, மூன்று ஆலைகள் வருவதாக இருந்தால் நான் மனப்பூர்வமாக வரவேற்கிறேன்.

அடுத்தபடியாக நான் குறிப்பிட விரும்புவது என்னவென்றால், அந்தப் பிராந்தியம் சம்பந்தப்பட்ட வரையில் ரயில் போக்குவரத்து வசதி இல்லை. அதற்காக நம்முடைய மாநில அமைச்சர் அவர்கள் சிபார்சு செய்யும்போது, விருதுநகர்—கீழக்கரை, மானாமதுரை—தூத்துக்குடி இவ்விரண்டு ரயில் பாதைகளைப் போடுவதற்கு சிபார்சு செய்யப்பட்டிருப்பதாகக் குறிப்பிட்டிருக்கிறது. தவறு செய்யாமல் அவைகள் நிறைவேற்றப்படவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தையை முடித்துக் கொள்கிறேன்.

**SRI S. PAKKIRISAMI PILLAI** : கனம் தலைவர் அவர்களே, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் உண்டான விவரங்களைப் பற்றி விரிவாக நிதி அமைச்சர் அவர்கள் பேசின பிறகு நானும் பேசுவதற்கு வாய்ப்பு கிடைத்ததற்காக தலைவர் அவர்களுக்கு என்னுடைய வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இரண்டொரு விஷயங்களைப் பற்றி மாத்திரம் குறிப்பாகப் பேசலாம் என்று எண்ணுகிறேன்.

இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்குத் தேவையான பணம் அதிகமான அளவில் இருக்கிறது. முதல், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் எவ்வளவு வைத்திருக்கிறார்களோ அதற்கு மேலே, சில இடங்களில் இரட்டிப்பாக வைத்திருக்கிறார்கள். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் வெகு அழகாக அமைய வேண்டும். நம் நாடு, நம் ராஜ்யம் வளம் பெற்று, நல்ல வாழ்வை அடையும்படியான நிலையிலே இருந்தாக வேண்டும் என்பது எல்லோருடைய கருத்தாகும்.

8th September 1960] [Sri S. Pakkirisami Pillai]

நம்முடைய ராஜ்யத்திலேயே மிகவும் பெருமைப்படக் கூடியதும் மிகப் பிரசித்தமானதும் நெய்வேலிச் சுரங்கத் திட்டமாகும். நெய்வேலிச் சுரங்கத் திட்டம் அத்தனை பேர்களும் அவாவுடன் எதிர்பார்க்கும்படியான நிலைமையில் இருந்து கொண்டிருக்கிறது. அந்தத் திட்டத்திற்கு எவ்வளவு அனுகூலங்களைப் பெற முடியுமோ அதைப் பெறுவதற்கு உண்டான சலுகைகளை இன்னும் நம் ராஜ்யம் மத்திய அரசாங்கத்தாரிடமிருந்து பெறவில்லை என்பது என்னுடைய கருத்து.

இன்னொரு இடத்தில் ஒரு நண்பர் சொன்ன மாதிரி, பக்ரா-நங்கல் அணைத் திட்டத்திற்கு ஒரு இண்டர்நாஷனல் இன்டரஸ்ட், அதாவது சர்வ தேச அவா உண்டாகி, அந்தப் பெருமையை எல்லோரும் பேசிக்கொண்டிருக்கும்படியான நிலையிலே அங்கு இருக்கிறது என்று சொன்னால், அதற்கு ஒப்பான நிலைமையிலே நம்முடைய நெய்வேலித் திட்டம் இருந்துகொண்டிருக்கிறது.

(Sri K. Sattanatha Karayalar in the Chair.)

நம்முடைய ராஜ்யத்திற்கு உண்டான இந்தப் பெரிய திட்டத்திலே ஏன் அந்த ஒரு அவாவை மக்கள் மத்தியிலே உண்டாக்கி மத்திய அரசாங்கம் தன் முழுக் கவனத்தையும் செலுத்தும்படியான நிலையில் வைக்கவில்லை என்பதை நாம் கொஞ்சம் யோசித்துப் பார்ப்போமானால் நன்றாகத் தெரிகிறது. நெய்வேலித் திட்டத்திற்கு அடுத்தபடியாக சேலத்தில் இரும்புக் கனி சுரங்கத் திட்டம். இந்த இரும்புக் கனியும் நிலக்கரியும் சேர்ந்து நமது நாட்டில் ஒரு சுபிட்சத்தை உண்டாக்கும் என்ற ஒரு ஆசை நமது மனதிலே இருந்து கொண்டிருக்கிறது. அது கைகூடி ஆகவேண்டும். சேலத்தில் இருக்கும்படியான இரும்புக் கனி, நெய்வேலியில் இருக்கும்படியான நிலக்கரி இத்தனையும் ஒன்றாகப் பிணைத்து நன்றாக வேலை செய்யவேண்டுமென்று சொன்னால், இந்த இரண்டு இடங்களுக்கும் போதிய போக்குவரத்து சாதனங்கள் அங்கே இருந்தாகவேண்டும். ஆனால், இப்பொழுது இருக்கும்படியான ரோடுகள், நெடுஞ்சாலைகள் இந்த இரண்டு இடங்களுக்கும் சரியானதாக இல்லவே இல்லை. ஏதோ ஒரு ரயில் தொடர்பு விருத்தாசலம் வரையில் வந்திருக்கிறது. இதில் அடிக்கடி சாமான்களைக் கொண்டு போவதற்கும், வருவதற்கும் முடியாது. சாலைகள் மிகவும் குறுகியவைகளாக இருக்கின்றன. அங்கே நடுவே இருக்கும் பாலங்களெல்லாம் மிகவும் குறுகியவைகளாக இருக்கின்றன. தூர திருஷ்டி கொண்டு இத்தனை ரோடுகளையும் செப்பனிட்டு, பாலங்களையும் உடனடியாக விஸ்தரிக்கவேண்டியது அரசாங்கத்தினுடைய முதல் கடமையாக இருக்கவேண்டும். அந்த ஒரு நிலையிலே எப்பொழுது வேலை செய்வார்கள்? அங்கங்கே அங்கத்தினர்களுடைய அபிலாஷைகளில் இருக்கும்படியான வேறு திட்டங்களைச் செய்துகொண்டு போனால் மாத்திரம் போதாது. நெடுஞ்சாலைகளைச் செப்பனிடுவதில் மிகவும் கண்ணும் கருத்துமாக இருந்து வேலை செய்யவேண்டிய நிலைமையிலே அரசாங்கம் இருந்து கொண்டிருக்கிறது. இப்பொழுது இருக்கும்படியான நெடுஞ்சாலைகளைப் பார்த்தோமானால் அவைகள் ரொம்பவும் குறுகிய சாலைகள். அதனால் லாரி போக்குவரத்து கூட தாராளமாகப் போக முடியவில்லை. நிறைய விபத்துக்கள் ஏற்பட்டுக்கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். அந்த சாலைகளை அகலப்படுத்துவதற்கு முடியாது. காரணம், சாலை மரங்கள் நடப்பட்டிருக்கின்றன. ஆகவே, இன்னொரு சாலை பக்கத்திலே போட்டு அகலப்படுத்த வேண்டிய நிலையிலே இப்பொழுது நமது ராஜ்ய சர்க்காரின் பொறுப்பு இருந்துகொண்டிருக்கிறது. நாம் கொஞ்சம் வடக்கே போய்ப் பார்த்தோமானால், கல்கத்தாவிலிருந்து பஞ்சாபுக்கு ரயில் மார்க்கமாகப் போகும்பொழுது 4 நிமிஷங்களுக்கு ஒரு கூட்ஸ் வண்டி போய்க்கொண்டிருக்கிறது. அந்த மாதிரி நிலை நமது ராஜ்யத்தில் இல்லை. திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்னது போல் நமது ராஜ்யத்தில் குட்ஸ் வண்டி மணிக்கு 8 மைல் வேகத்தில் போய்க்கொண்டிருக்கிறது. ஆகவே, நமக்குப் போக்குவரத்து சாதனங்கள் சரியானதாக இல்லை. சாலைகள் ஒரு பக்கம் சரியானதாக இல்லை. பாலங்கள் சரியானதாக இல்லை. போதுமான அளவுக்கு சாலைகளெல்லாம் செப்பனிடப்படவில்லை. உடனே இந்தச் சாலைகளெல்லாம் செப்பனிடப்பட வேண்டும். நிலக்கரியையும் இரும்புக் 10-00 a.m.

[Sri S. Pakkirisami Pillai] [8th September 1960

கனியையும் ஒன்ருகச் சேர்த்து, பிணைத்து, தரப்படுத்துதவதற்கான உண்மையான திட்டத்தை நிறைவேற்றும் நாம் உடனடியாக சேலத்தையும் நெய்வேலியையும் ஒன்ருகச் சேர்த்து அதற்குண்டான ரோடுகளை முதலிலேயே அமைக்கும்படியான நிலையிலே இருந்தாகவேண்டும். மொத்தத்தில் நாம் பார்க்கும்பொழுது வாணிபம் பெருகவேண்டுமென்று சொன்னுல், சாலைகள் சரியாக அமைந்திருக்க வேண்டும்.

நண்பர் திரு. கிருஷ்ணசாமி நாயுடு அவர்கள் ' சின்னச் சின்ன ஊர்களிலே நெருக்கடியான ரோடுகளில் பஸ்கள் போகும்படியாக இருப்பதால், மக்கள் கஷ்டப்படும்படியான நிலையில் வண்டிகளில் போய்க்கொண்டிக்கிருர்கள், அந்த ரோடுகளெல்லாம் எப்பொழுது சீர்திருத்தப்படுமோ, என்னவோ ' என்ற சந்தேகக் குறிக்கோள் கொண்டு பேசினுர்கள். ஆகவே, அம்மாதிரியான நிலைமையைப் போக்குவதற்கு முதலடியாக அரசாங்கம் முன்வரவே.ண்டும்.

இது தவிர, நம் சென்னை நகரத்திலும்கூட ரோடுகளை சர்க்கார் பஸ்கள் உபயோகப்படுத்திக் கொண்டிருந்தும், ரோடுகளுக்கு உண்டான செலவை கார்பொரேஷனே செலவு பண்ணும்படியான நிலையிலே விட்டு வைத்திருக்கிருர்கள். அதன் நிலைமை இப்பொழுது என்ன என்பதையும் நாம் பார்க்கிருேம். ஏதோ ஒன்றிரண்டு முக்கியமான ரோடுகள் நல்ல நிலைமையிலே இருந்தாலும், அது மாத்திரம் போதாது. எல்லா ரோடுகளும், பஸ் போகிற ரோடுகளெல்லாம் நல்ல முறையில் இருக்கும்படியான நிலைமைக்கு அரசாங்கத்தார் முன்வந்து பண உதவி செய்து கொடுத்து, அந்த ரோடுகளெல்லாம் செப்பனிடப்படவேண்டும். கார்பொரேஷன் அதிகாரிகள் அதைச் செய்வதற்குத் தயாராக இருக்கிருர்கள். ஆனுல் பணம் தேவை. பணத்தை அரசாங்கம் அவர்களுக்குக் கொடுக்காமல் மடக்கி வைத்து விட்டு, மற்ற ஜில்லாக்களுக்கு ஒரு கொள்கை, நகரத்திற்கு ஒரு கொள்கை என்ற நிலையிலே இருக்குமானுல், நகரத்திலே அதனுடைய அந்தஸ்திற்கு ஏற்றவாறு ரோடுகளை வைத்திருக்கும்படியான நிலை இல்லை. பெரிய ரோடுகளே இப்படி என்று சொன்னுல், சின்ன ரோடுகளின் கதி என்ன ஆகும் என்பதை நாமே உணர்ந்து கொள்ளலாம். மிகவும் கேவலமான நிலைமையிலே சென்னையில் இருக்கும்படியான ரோடுகள் இப்பொழுது இருந்துகொண்டிருக்கின்றன. இவைகளைச் சரிப்படுத்துவதற்கு அரசாங்கத்தார் உடனடியாக ஒரு குழுவை அமைத்து விசாரணை செய்து, அதற்குண்டான வேலைகளைச் செய்யவேண்டும் என்று நான் இந்தச் சந்தர்ப்பத்திலே கேட்டுக்கொள்ளுகிறேன்.

நண்பர் நிதி மந்திரி அவர்கள், அவர்களுடைய பிரசங்கத்தில் பொருளாதாரத் தத்துவத்தைப் பற்றி வெகு அழகாக விவரித்துச் சொன்னுர்கள். தொழிலாளர்கள் தங்களுடைய சம்பளத்திலிருந்து சேமிப்பு செய்ய வேண்டும், வீண் விரயம் செய்யக்கூடாது. வீண் விரயம் செய்தால் உற்பத்திப் பெருக்கம் எற்படாது, வீண் விரயம் பண்ணும்படியான நிலையிலே தொழிலாளர்கள் இருப்பார்களேயானுல், அது நாட்டிற்கு நன்மை பயக்காது, நாட்டிறகு அது ஒரு நல்ல பணியாக முடியாது என்ற தத்துவத்தில் பேசினுர்கள். இந்தப் பொருளாதாரப் பிரசங்கம் முதலாளித்துவ பொருளாதார நிலைமையிலேயே செய்யப்பட்டிருப்பதை நாம் பார்த்தோம். ஏதோ இம்மாதிரியான பிரசங்கங்களெல்லாம் ஏழைகளுக்கும், தொழிலாளிகளுக்கும்தான் பிரசங்கங்களாக இருந்துகொண்டிருக்கின்றன. ஆனுல், சுரண்டி, கொழுத்து, சுகபோகங்களை உண்டு வாழும்படியான முதலாளிகளுக்கு அம்மாதிரிப் பிரசங்கங்கள் கிடைக்கவில்லை. அம்மாதிரியான பிரசங்கம் செய்வதற்கு பெரிய அதிகாரிகள் யாரும் முன்வருவது கிடையாது. ஏன் இதைச் செல்லுகிறேன் என்று சொன்னுல், நாம் இப்பொழுது கணக்கு எடுத்துப் பார்த்தால் தொழிலாளர்களெல்லாம் கடன் சுமையிலே இருந்து கொண்டிருக்கிருர்கள். வீண் விரயம் செய்கிருர்கள் என்று நான் சொல்ல முடியாது. ஏதோ ஒரு சிறிய பகுதி அந்த மாதிரி நிலையிலே இருக்கலாம். ஆனுல் பெரிய பகுதி தங்களுடைய குடும்பத்தை, குமாரர்களையும், குமாரத்திகளையும் வைத்துக்கொண்டு உற்ருர் உறவினர்களையும் வைத்துக்கொண்டு காப்பாற்றும்படியான நிலையில்

தான் இருக்கிறார்கள். தொழிலாளர்கள் பாடுபட்டு உழைக்கும் கூட்டத்தார்கள். அந்த நிலையிலே பார்க்கும்பொழுது அவர்களுக்குக் கடன் இருந்துகொண்டுதான் இருக்கிறது. அந்தக் கடன் சுமையை நீக்குவதற்கு அரசாங்கம் என்ன வழி செய்திருக்கிறார்கள் என்று பார்த்தால், ஒன்றையும் காணோம். தொழிலாளர்களுக்கு உண்மையான நலன்கள் ஏதாவது இந்தத் திட்டத்தில் இருக்கிறதா என்று பார்த்தால், அது மறைவாகத்தான் இருக்கிறது. ஏதோ தொழிலாளர்களுக்கு உண்டான திட்டங்களெல்லாம் இந்தியா கவர்ன்மெண்டினுடையது என்று சொல்ல முடியாது. ராஜ்ய சர்க்காருடைய அங்கீகாரத்திலே அவர்களுடைய ஆதரவிலே பல திட்டங்களைத் தீட்டி தொழிலாளர்களுக்கு நல்ல பணி செய்வதற்கு இடம் இருக்கிறது. ஏதோ முதல் இரண்டு திட்டங்களில் இல்லை என்று சொன்னாலும், இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் இம்மாதிரி திட்டம் ஒன்றும் இல்லை, எதுவும் காணோம் என்பதைப் பற்றி நான் இந்த சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இன்னொரு விஷயம். இப்பொழுது கல்வி விஷயத்திலே ஏதோ ரூ. 100, 105 சம்பளம் வாங்கினாலும், உடனே எந்த ஜாதிக்காரராக இருந்தாலும், தாழ்த்தப்பட்ட சமூகத்தை, பிற்போக்கு சமூகத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும், சம்பளத்தைக் கட்டி ஆகவேண்டும். அதை மாற்றி அமைக்கவேண்டுமென்று சொன்னபோது, அதற்கு அரசாங்கம் ஒத்துக் கொள்ளவில்லை, மறுத்துவிட்டார்கள். பிள்ளைகள் படிப்பதற்குத்தான் அப்படி இருக்கிறது. இப்பொழுது 100, 105 அல்லது 110 ரூபாய் இருந்தவர்களுக்குத்தான் அப்படிப்பட்ட சலுகைகள் இருக்கின்றன. அவர்களுடைய பிள்ளைகள்தான் படிக்க முடியும் என்று இருக்கிறது. இந்த நிலைமையில் பெண்கள் படிக்க முன் வருவதாகவே இல்லை. பெண்கள் உயர்நிலைப் பள்ளிகளில் படிக்க வருவதாகவே இல்லை. பெற்றோர்களுக்கு பணம் இல்லாத காரணத்தால் பெண்கள் அப்படிப் படிக்க முடியவில்லை. 100 ரூபாய் என்று இல்லாமல் 150 அல்லது 200 ரூபாய் என்று வைத்தால் அநேகம் பிள்ளைகள் படிக்க முன்வருவார்கள். முக்கியமாக பெண்கள் படிக்க முன்வருவார்கள். பிள்ளைகளைவிட பெண்களுடைய படிப்புக்குத்தான் முக்கியமாகக் கவனம் செலுத்த வேண்டியது அவசியமாக இருக்கிறது. பெண்களுக்கு அதிகப்படியாகச் சலுகை காண்பிக்க அரசாங்கம் முன் வரவேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தையை இத்துடன் முடித்து கொள்ளுகிறேன்.

* Sri C. N. ANNADURAI : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப்பற்றி இந்த மன்றத்தில் பலருடைய கருத்துக்களைக் கேட்பதற்கு வாய்ப்புக் கிடைத்த பிறகு திராவிட முன்னேற்றக் கழக சார்பில் என்னுடைய கருத்தைத் தெரிவிக்க வாய்ப்புக் கிடைத்ததற்கு மகிழ்ச்சி அடைகிறேன். இந்த மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்தைப் பற்றிய கருத்தைத் தெரிவிக்கிற நேரத்தில் கடல் நீர் கரிக்கிறது என்று சொன்னவுடன் உங்களுக்குக் கடல் என்றால் பயமா? கடல் பிரயாணம் என்றாலே பயமா? கடற்கரையில் நின்றுகொண்டு பேசுகிறாயே, உனக்குக் கப்பல் என்றாலே பயமா? கப்பல் கடலில் நிற்கக்கூடாதா? உப்பு இல்லாமல் மனிதன் வாழ முடியுமா? கடல்நீர் கரிக்கிறது என்கிறாயே, உப்பு பிடிக்கவில்லையா? கடலும் பிடிக்கவில்லையா? என்று கேட்பது போல் மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்தில் நாங்கள் காணக் கூடிய சில குறைபாடுகளை எடுத்துச் சொல்லக் கூடிய நேரத்தில் உங்களுக்குத் திட்டம் என்றாலே பிடிக்கவில்லையா, திட்டங்களை நிறைவேற்றுவதில் உங்களுக்குத் திருப்தி இல்லையா? திட்டம் வெற்றி பெறுவது பிடிக்கவில்லையா? என்ற வகையில் ஆளும் கட்சியில் உள்ளவர்கள் அமைச்சர்கள் உள்பட எண்ணிக்கொள்வது அவ்வளவு பொருத்தமானது அல்ல என்று நான் கருதுகிறேன். ஐந்தாண்டுத் திட்டங்கள் உண்மையிலேயே அலட்சியப்படுத்தத்தக்கவை என்று நாங்கள் கருதியிருப்போமானால் இந்த ஐந்தாண்டுத் திட்டங்கள் எந்த முறையில் வகுக்கப்பட்டிருக்கின்றன என்பதைப்பற்றி அக்கரை செலுத்தி இருக்கமாட்டோம். திட்டமிட்டபடி வாழ்க்கை நடத்தப்பட வேண்டும் என்பது 19-ஆவது நூற்றாண்டு முடிந்து 20-வது நூற்றாண்டு ஆரம்பமானவுடன் நாகரிக அரசுகள் ஒவ்வொன்றும் மேற்கொண்டிருக்கும்

[Sri C. N. Annadurai] [8th September 1960

கொள்கையாகும், நடைமுறையாகும். எந்த விதத்திலும் எந்த நாட்டிலும் அவர்கள் திட்டமிட்டபடி காரியத்தைச் செய்வதில் வரவேற்கத்தக்க வகையில் கொள்கை வெற்றி பெற்று வந்திருக்கிறதே தவிர திட்டமிடாமல் வாழ்க்கையை நடத்த வேண்டும் என்று எடுத்துச் சொல்லுகிற கொள்கை பதினெட்டாவது நூற்றாண்டில் மறுக்கப்பட்டு, பத்தொன்பதாவது நூற்றாண்டில் அது குத்துயிராக இருந்து, இருபதாவது நூற்றாண்டில் அது அறவே மடிந்து விட்டது. ஆகவே திட்டம் அல்லது கொள்கையைப் பற்றியோ திட்டமிட்டபடி வாழ்க்கை நடத்தப்படவேண்டும், அது தனிப்பட்டவர்களுடைய வாழ்க்கையானாலும் சரி, சமுதாய வாழ்க்கையானாலும் சரி, அல்லது அரசியல் வாழ்க்கையானாலும் சரி, அது திட்டமிட்டபடி நடத்தப்படவேண்டும் என்பதில் எங்களில் யாருக்கும் ஐயப்பாடு இல்லை ஆனால் இப்பொழுது போடப்படும் திட்டம் யார் சார்பில் போடப்படுகிறது என்பதும், யாரால் நடத்தப்பட்டு வருகிறது என்பதும், அதில் என்ன பலன்களை எதிர் பார்த்தார்கள் என்பதும், எதிர் பார்த்த பலன்களில் ஏதாவது குறைவு இருக்கிறதா, குறை இருந்தால் அதற்கு யார் பொறுப்பு என்பதும், அந்தக் குறைவைப் பூர்த்தி செய்வது மறுபடியும் அவசியமா என்பதும்தான் இதில் எண்ணிப் பார்க்க வேண்டிய விஷயமாகும். நம்முடைய கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்த திட்டத்தைப் பற்றி விளக்கும் நேரத்தில் இதை ஒரு தனித்திட்டமாகப் பார்ப்பதற்கு இல்லை, பல ஐந்தாண்டுத் திட்டங்களில் இது இடையிலேயுள்ள திட்டம் என்பது மட்டும் அல்ல, இனி வர இருக்கும் திட்டங்கள் அல்லது இதற்கு முன்னால் போடப்பட்ட திட்டங்கள் அவைகளுக்கு இடையில் இருக்கும் ஒரு வளையம் என்றும் குறிப்பிட்டார். அந்தச் சங்கிலித் தொடர் முதல் ஐந்தாண்டுத் திட்டத்திலிருந்து தொடங்கி ஆளும் கட்சியிலுள்ள பல தலைவர்களுடைய கருத்தின்படி ஏறத்தாழ இன்னும் ஐந்து அல்லது ஆறு ஐந்தாண்டுத் திட்டங்கள் வரையில் 25 அல்லது 30 ஆண்டு காலத்திற்கு தொடர்ந்து செல்லும் என்று தெரிகிறது. அவ்விதம் பணியாற்றினால்தான் இந்நாட்டினுடைய பொருளாதார நிலையைச் செம்மைப்படுத்த முடியும் என்று அவர் கூறுகிறார். அந்தக் கருத்திலும் அதற்காக அவர்கள் முயற்சி செய்வதிலும் அவர்கள் ஆர்வம் காட்டுவதிலும் யாரும் குறைபடுவதும் இல்லை, அது தவறு என்று யாரும் வாதாடவும் மாட்டார்கள். ஆனால் பொருளாதாரத் துறையில், அரசியல் துறையில் இந்தத் திட்டத்தைத் தீட்டும் நேரத்தில் முதல் இரண்டு திட்டங்கள் தீட்டப்பட்டு நிறைவேற்றப்பட்டு அதில் கிடைத்த பலன்கள் என்ன என்பதைப் பார்த்து மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் வகுக்கப்பட்டிருக்க வேண்டும் என்பது என்னுடைய தாழ்மையான கருத்தாகும். அந்த முறையில்தான் வகுத்திருக்கிறோம் என்று குறிப்பிட்டிருப்பதை நான் மறந்து விடவில்லை. ஆனால் முதல் திட்டமானாலும் அதற்குப் பிறகுள்ள திட்டமானாலும் பொருள் உற்பத்திக்காக மட்டும் அல்ல, செல்வம் சேகரிக்கப்பட வேண்டும் என்பதற்காக மட்டுமல்ல, சேகரிக்கப்படும் செல்வத்தின் மூலம் வாழ்க்கைத்தரம் உயர்ந்து அந்த வாழ்க்கைத் தரம் சிலருக்கு மட்டும் உயர்ந்து விடாமல் பரவலாக சமுதாயத்தினுடைய தரத்தையே உயர்த்த வேண்டுமென்ற பரந்த நோக்கத்தோடு தான் திட்டங்கள் வகுக்கப்பட்டன. அந்தத் திட்டங்களைப்பற்றிய அறிவிப்புகளைப் படிக்கும் நேரத்தில் உண்மையிலேயே நேற்று முன்தினம் இந்தியத் துணைக் கண்டத்தின் பிரதம அமைச்சர் சொன்னது போல் கனவு உலகத்திற்கு நாம் சென்று கொண்டிருக்கக்கூடும். அப்படிப்பட்ட நல்ல இன்பகரமான சூழ்நிலைகள் அதைப்படிக்கும் நேரத்தில் ஏற்படுகின்றன. எல்லா மக்களுக்கும் நிலம், எல்லா மக்களுக்கும் தொழில், எல்லா மக்களுக்கும் இருப்பிடம், எல்லா மக்களுக்கும் வயிறாரச் சோறு, நோய்தீர மருந்து, அறிவாரக் கல்வி, இப்படிப்பட்ட சிறந்த திட்டங்களை நாம் வைத்திருக்கிறோம் என்று அறிக்கையில் குறிப்பிடுவதை படிக்கும் நேரத்தில் உண்மையிலேயே கனவு உலகத்திற்குத் தூக்கிச் செல்லப்படுகிறோம். அப்படிப்பட்ட இன்ப நுகர்ச்சிகள் வாக்களிக்கப்படுகின்றன. அப்படி வாக்களிக்கப்பட்ட வகையில் முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டுப் பலன் கிடைத்ததா என்றால் கொஞ்சம் பெரிய விஷயத்தில் அதிகமான அளவில் துணிச்சலைக் காட்டுகிறவர்கள் "ஆம்" என்று கவலைப்படாமல்தான் பேசுவார்கள். ஆனால் இன்றையதினம் கவனித்தால் ஒரு அடக்க உணர்ச்சி ஏற்பட்டிருப்பது தெரிகிறது. உண்மைதானாகவே வெளிப்பட்டு விடும் என்ற

8th September 1960] [Sri C. N. Annadurai]

அச்சம் ஏற்பட்டிருக்கிறது. சிலபல துறைகளில் எதிர்பார்த்த பலன் கிடைக்க வில்லை, கிடைத்த பலனும் சமுதாயத்துக்குப் பரவலாகச் சேராமல் எங்கோ போய்ச் சேர்ந்துவிட்டது; எது எங்கே போய் சேர்ந்தது என்பதைக் கண்டு பிடிக்கக் கூடிய வேலையில் இப்போது இருக்கிறோம், அதற்கு நிபுணர் குழுவை அமைத்திருக்கிறோம் என்று பேசப்படுகிறது. அதைக் கண்டு பிடிப்பது நல்லது என்று அவர்கள் இன்றைய தினம் ஒரு முடிவுக்குவந்திருக் கிறார்கள்.

இதிலிருந்து முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் எதிர்பார்த்த பலன் கிடைக்கவில்லை என்பதும், கிடைத்த பலனும் சமுதாயத்துக்குப் பரவலாகப் போய்ச்சேராமல் ஒரு சிலரிடத்தில் குவிந்து விட்டது என்பதும் தெரிகிறது. இதை மனதில் வைத்திருப்பார்களானால் மூன்றாவது ஐந்தாண் டுத் திட்டத்தைத் தீட்டும் நேரத்தில் பலன் குறைந்ததற்கு என்ன கார ணம் என்பதைப் பார்த்து அவைகளை நீக்கிவிட்டு, கிடைத்தபலன் சமுதாயத் துக்குப் போய்ச் சேராமல் ஒரு சிலரிடத்தில் மட்டும் குவிந்ததற்குக் கார ணம் என்ன என்பதை ஆராய்ந்து பார்த்து அந்த ஒரு சிலரிடத்தில் அந்தப் பலன் குவியாமல் இருப்பதற்கு ஏற்ப முறைகளை வகுக்கவேண்டும் அப்படி வகுத்து இருக்கிறார்களா என்று பார்த்தால் நிச்சயமாக இல்லை. ஏன் நிச்சயமாக இல்லை என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்லுகிறேன் என்றால் இதைவிட அழுத்தம் திருத்தமாக கனம் நிதி அமைச்சர் அவர்கள் சொன்னார், "தொழில்கள் வளர வேண்டும் என்பதுதான் என்னுடைய நோக்கமே தவிர அது தனியார் துறையானாலும் சரி, பொதுத் துறையிலி ருந்தாலும் சரி, எந்தத் துறையில் வளருகிறதாக இருந்தாலும் சரி, அதைப் பற்றி நான் கவலைப்படமாட்டேன், எனக்குக் குறிப்பாகத் தொழில் வளர வேண்டும், உற்பத்தி பெருகவேண்டும், பொருள் கிடைக்க வேண்டும் என்பது தான் என்னுடைய நோக்கமே தவிர அதை யார் நடத்துகிறார்கள், அது தனியார்துறையிலா அல்லது பொதுத்துறையிலா என்பதைப்பற்றி நான் கவனிப்பதே இல்லை" என்று அவர் மிகவும் அழுத்தம் திருத்தமாகச் சொன்னார். அவருடைய அழுத்தம் திருத்தமான கருத்துக்குக் காரணம் அவர் சார்ந்திருக்கும் கட்சியினர் நடத்தும் அரசிலே இதைப்பற்றி ஏற் கெனவே நிறைவேற்றப்பட்டிருக்கும் இண்டஸ்ட்ரியல் பாலிஸி. அந்தத் தீர்மா னத்தை எண்ணிக்கொண்டு தனியார் துறை, பொதுத்துறை என்று பிரித்துப் பார்க்கப் போவதில்லை என்று அமைச்சர் அழுத்ததிருத்தமாகச் சொன்னார். நான் அதைப்பற்றி ஒன்று சொல்ல விரும்புகிறேன். தனியார்துறை, பொதுத் துறை என்பதைப்பற்றி உங்களுக்குப் பாகுபாடு இல்லாமல், எப்படி இருந்தாலும் தொழில் வளர்ந்தால் போதும் என்கிற எண்ணம் பெருந்தன் மையின் பாற்பட்டதாக இருந்தாலும்—அந்த முறையைக் கையாண்டதால் தான்—அந்த முறையைக் கையாளுவதால்தான் முதல் இரண்டு ஐந் தாண்டுத் திட்டங்களிலும் கிடைத்த பலன், கிடைத்த தேசிய வருமானம் தனிப்பட்டவர்களுடைய கையிலே போய்ச் சேர்ந்து கொண்டது ஏழை எளியவர்கள் வாழ்கின்ற சமுதாயத்திற்குப் பரவலாகப் போய்ச் சேரவில்லை. அது தெரிந்திருந்தும் ஏன் மீண்டும் அந்தத் தவற்றைச் செய்ய வேண்டும்? நிச்சயமாக இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைத் துருவித் துருவிப் பார்த்தும் தனியார் துறை, பொதுத் துறை ஆகிய இரண் டையும் அலசிப் பார்த்தும் என்ன தெரிகிறது ? பொதுத் துறை வளர்ச்சி அடையாது தனியார் துறை அதிகப்பட அதிகப்பட்ட அதன்பயன் சமு தாயத்திற்குப் போய்ச்சேராது என்று பொருளாதார நிபுணர்கள் மட்டும் அல்ல—இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களினால் நமக்குக் கிடைத்த அனு பவம்கூட உணர்த்துகிறது. உணர்த்தியும்கூட தனியார் துறை பற்றிக் காட் டப்பட்டிருக்கிற அக்கறை பொதுத் துறைக்குச் செலுத்தப்படவில்லை என் றால், " நீங்கள் தெரிந்தும் தவறு செய்கிறீர்கள், தெரிந்தும் மக்களுக்குத் துரோகம் செய்கிறீர்கள், தெரிந்தும் சமதர்மத் திட்டத்தைத் தலைகீழாக மாற்றி சமதர்மத் தத்துவத்தையே தகர்த்தெறிகிறீர்கள் " என்கிற குற்றச் சாட்டில் இருந்து எப்படித் தப்பப் போகிறீர்கள் ?

ஆகையால் தான் முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களைப் பொருத்த வரையிலும் நீங்கள் அனுசரித்த கொள்கை திட்டங்களின் பலனைப் பரவலாக

[Sri C. N. Annadurai] [8th September 1960

சமுதாயத்திற்குப் போய்ச் சேரவிடாமல் தடுத்துவிட்டது என்கிற காரணத்தினுல் நீங்கள் அந்தக் கொள்கை அடிப்படையிலேயே இன்றையதினம் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தையும் வகுப்பதன் காரணமாக—போடுகிற திட்டங்களினுல் பலன் கிடைக்கிறது என்ருலும்கூட—அது குறுகிய அளவுக்குக் கிடைக்கிற பலனுக இருந்தாலும்—பெருகிய அளவில் கிடைக்கிற பலனுக இருந்தாலும்—சமுதாயத்திற்குப் போய்ச் சேராது என்பதை நான் இந்த நேரத்தில் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் இதை விளக்கிப் பேசுகின்ற நேரத்தில் மிக அருமையான கருத்தை எடுத்துச்சொன்னுர்கள். மிக அருமையான கருத்து என்பது மட்டும் அல்ல; மிகப் புதுமையான கருத்தும் கூட; மிகப் புதுமையான கருத்து என்பது மட்டும் அல்ல; அவர்கள் கட்சியே அதை ஏற்றுக்கொண்டதா இல்லையா என்பதைக்கூட எண்ணிப்பார்க்காமல் மிகத் துணிச்சலாகச் சொன்ன கருத்து. அந்தக் கருத்து என்னவென்ருல்; "பொருள் உற்பத்தி பெருகப் பெருக, தொழில் வளர வளர அதில் கிடைக்கக் கூடிய லாபம், தொழிலாளர்களுக்குச் சேர வேண்டிய உரிய பங்கு அவர்களிடத்தில் போய்ச் சேர்ந்தாலொழிய தொழிலாளர்களுக்கு உள்ளுணர்ச்சி ஏற்படாது, உற்சாகம் ஏற்படாது. ஆகையால் உற்பத்தி பெருகப் பெருக, லாபம் வளர வளர தொழிலாளர்களுக்கு அதன் பங்கு போய்ச் சேரவேண்டும். ஆனுல் அந்தப் பணத்தை அவர்கள் எப்படிச் செலவழிக்கிருர்கள் என்பதைக் கவனிக்கலாம். அவர்கள் ஆடம்பரத்தில் செலவிட்டால் அதைத் தடுக்கலாம். வாழ்க்கைத் தரத்தை மிக அதிகமாகப் பெருக்கிக்கொள்ள ஆரம்பித்தால்—சீராக ஒரு நிலையில் இருக்கும்படி செய்து—அவர்களிடத்தில் மிஞ்சுகிற பணத்தைச் சிறு சேமிப்புத் திட்டமாகச் சேகரித்து அப்பணத்தைத் திட்டங்களின் முதலீட்டுக்குப் பயன்படுத்தலாம்" என்று அவர்கள் குறிப்பிட்டார்கள்.

இதே சட்டமன்றத்தில்—சென்ற ஆண்டு என்று கருதுகிறேன்—உற்பத்தி பெருகவேண்டுமானுல் தொழிலாளர்களுடைய கூலி இனி உயரவேகூடாது, அவர்களுடைய கூலி கட்டுப்படுத்தப்படவேண்டும் என்று பேசிய உறுப்பினர்கள் இதைக்கேட்டு ஒரு பெரிய அதிர்ச்சிக்கு உள்ளாகியிருப்பார்கள் என்று நான் கருதுகிறேன். உற்பத்தி அதிகமாகவேண்டும், அதிகமாகவேண்டும் என்று பேசப்படுகிற நேரத்தில் உற்பத்தியைப் பெருக்காமல் இருக்கிற பெருங்குற்றம் தொழிலாளர்களேயே சார்ந்தது, தொழிலாளர்கள் தங்கள் கூலியை உயர்த்த வேண்டும், உயர்த்தவேண்டும் என்று கிளர்ச்சி செய்துகொண்டே போவதனுல் உற்பத்தியைப் பெருக்கவேண்டும், அதிக மூலதனமிட்டு அதிகப்படுத்தவேண்டும் என்கிற அக்கறை முதலாளிமார்களுக்கு ஏற்படாமல் போகிறது என்று இந்தச் சட்டமன்றத்தில் எடுத்துப் பேசியவர்களுடைய கருத்துக்களை எல்லாம் தகர்த்து எறிகின்ற முறையில் நமது மதிப்பிற்குரிய நிதி அமைச்சர் அவர்கள் இன்றைய தினம் தொழில் வளர வளர, லாபம் பெருகப் பெருக தொழிலாளர்களுக்கு அதன் பங்கு போய்ச் சேரவேண்டும் என்று துணிச்சலோடு சொன்னுர்கள் என்ருல் உண்மையில் அந்தக் கருத்து வரவேற்கத் தக்கதாகும். தேம்ஸ் நதிக் கரையில் உலவுவதற்கு முன்னுல் கூவம் நதிக்கரையில் இருக்கிற கொள்கையைக் கைவிட்டு விட்டதற்காக நான் மகிழ்ச்சி அடைகிறேன். அவர்களுடைய லண்டன் பயணத்தில் அவர்கள் பார்க்கவேண்டிய பல காட்சிகளோடு கூட—இரண்டு மூன்று நூற்ருண்டுகளாக அந்நாட்டுப் பொருளாதார நிபுணர்கள், அரசியல் தத்துவ அறிஞர்கள் ஏற்படுத்தி வைத்த இலட்சிய விளக்க இடங்களுக்குச் சென்று இங்கிலாந்து நாட்டில் தொழில் புரட்சி ஏற்பட்ட நேரத்தில் தனிப்பட்ட முதலாளிகள் அடித்துக்கொண்டிருந்த கொள்ளை லாபம் எவ்வாறு கட்டுப்படுத்தப்பட்டது என்பதையும் அறிந்துகொண்டு வருவதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. ஆனுல் அரசாங்கச் சார்பில் செல்பவர்களுக்கு அந்தச் சந்தர்ப்பம் எளிதில் கிடைப்பது இல்லை. ஆனுலும் அந்தச் சந்தர்ப்பத்தை நிதி அமைச்சர் அவர்கள் ஏற்படுத்திக்கொள்வார்கள் என்று நம்புகிறேன். (கனம் ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம் : ஏற்படுத்தப்பட்டிருக்கிறது) ஆகையால் அவர்கள் லண்டன் போவதற்கு முன்னுல் நல்லதொரு தத்துவத்தை இங்கே சொல்லிவிட்டுப் போவதற்காக நான் மகிழ்ச்சி அடைகிறேன். மேல்நாடுகளில் நல்லவிதமாகச் சுற்றுப்பிரயாணம் செய்து, காண

8th September 1960] [Sri C. N. Annadurai]

வேண்டிய இடங்களையெல்லாம் கண்டு, பெறவேண்டிய அனுபவங்களை எல்லாம் பெற்று, பெற்றதை ஒன்றுகூட ஒளிக்காமல் இந்த இடத்தில் யெடுத்துச் சொல்லி, நல்லவற்றையெல்லாம் இங்கும் நடைமுறைக்குக் கொண்டுவருவதற்கு அவர்கள் முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, லண்டன் பயணம் வெற்றிகரமாகவேண்டும் என்ற என் நல்லெண்ணத்தையும், வாழ்த்தையும் இந்த நேரத்தில் தெரிவித்துக் கொள்கிறேன்.

மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தில் தொழிலாளர்களுக்குரிய பங்கை அதிகப்படுத்த, அந்தப் பங்கை அவர்கள் வீணுக்கவிடாமல், விரயமாக்க விடாமல் மூலதனத்திற்கே திரும்பப் பெறுவதற்கு முயற்சி செய்ய வேண்டும் என்ற கருத்தை இதற்கு முன்னுல் இத் திட்டத்துதைப்பற்றிப் பேசியவர்கள் எல்லாம் எங்காவது எடுத்துச் சொல்லியிருக்கிருர்களா, இல்லையா என்று நேற்றும், முன்தினமும் எல்லா ஏடுகளையும் துருவித் துருவிப் பார்த்தேன். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட விவாதத்தின் போது ஒரே ஒரு பாராளு மன்ற உறுப்பினர் தெரிவித்த கருத்து இதற்கு ஒத்ததாக இருந்தது. லாபம் பெருகப் பெருக தொழிலாளர்களுடைய கூலியை உயர்த்தி, வேண்டுமானுல் அந்த உயர்வுக் கூலியை அவர்கள் விரயமாக்கிவிடாமல், விலைவாசியைக் கட்டுப்படுத்தி, அப் பணத்தை நீங்கள் புதுத் தொழில்களுக்கு எடுத்துக்கொள்ளுங்கள் என்று அப்போது நிதி அமைச்சராக இருந்த திரு. தேஷ்முக் அவர்களை ஒரு உறுப்பினர் கேட்ட நேரத்தில், "இது நல்ல யோசனைதான். ஆனுல் செல்வம் சமுதாயத்தில் பரவலாகப் போய்ச் சேர்ந்துவிட்டால் அதைத் திரும்பப் பெறுவது சிரமமாக இருக்கும். எவ்வளவு பரவலாகப் பிரிந்துசென்றிருக்கிறது, அவற்றைத் திரட்டுவது என்ருல் எந்த அளவுக்குக் கிடைக்கும் என்று கணக்கெடுத்துப் பார்த்துத் திட்டங்களையும் போட முடியாது. ஆக இப்படி இரண்டு சங்கடங்கள் இருக்கின்றன" என்று எடுத்துப் பேசியிருக்கிருர்கள். அது தவிர இதைப் பற்றி அதிகமான அளவுக்கு விவாதிக்கப்படவில்லை. ஆகவே இன்றைய தினம் இந்தக் கருத்தைத் தெள்ளத் தெளிவாக நமது சபையில் எடுத்துச் சொல்லிய நிதி அமைச்சர் அவர்கள் இங்கே சொன்னதோடு நிற்காமல் மத்திய சர்க்காரிடத்திலும் எடுத்துச் சொல்லி அவர்களை இதற்கு இணங்கச் செய்ய வேண்டிய பொறுப்பையும் எடுத்துக்கொள்ள வேண்டும். இந்தக் கருத்தை அதிக அக்கறையோடு அவர்கள் தெரிவித்திருப்பதன் காரணத் தினுல் இதனுடைய சாதக பாதகங்களை எல்லாம் அவர் நன்ருக ஆராய்ந்து பார்த்துத்தான் இந்த முடிவுக்கு வந்திருப்பார்கள் என்பதில் ஐயம் இல்லை. அப்படி ஒரு நிலைமை ஏற்படுமானுல் உண்மையில் தொழில்துறையில் ஈடுபட்டிருக்கிற தொழிலாளர்களிடத்திலே, உற்பத்தியைப் பெருக்குகின்ற பொறுப்பை ஏற்றுக்கொண்டுள்ள தொழிலாளர்களிடத்திலே ஒரு புத்துணர்ச்சி ஏற்படும். தங்களுக்கு நல்வாழ்வு கிடைக்கும், நாட்டின் பொது நன்மைக்கும் பயன்படும் என்கிற உணர்ச்சி ஏற்படுமானுல் அவர்கள் செய்கின்ற பொருள்களுடைய அளவு பெருகும் என்பது மட்டும் அல்ல, செய்யப்படுகின்ற பொருள்களுடைய தரமும் நிச்சயமாக உயரும். இன்றைய தினம் பொருள் உற்பத்தி அதிகமாகியிருக்கிறது என்று சொல்லலாம். ஆனுல் பொருளினுடைய தரத்தில் தொழிலாளர் அக்கறை காட்டுகிருர்கள் என்று சொல்ல முடியாது. இதற்குக் காரணம் என்னவென்ருல் இன்னுள் வரையில் நமது நிதி அமைச்சர் உள்பட, காங்கிரஸ் மேலிடத்தில் உள்ளவர்கள் வரையில் உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்றுர்களே தவிர தரத்தைப்பற்றிக் கவலை காட்டியதில்லை. அதுவும் பண்டித ஜவஹர் லால் நேரு அவர்கள் மிக நல்ல முறையில் கற்பனை உலகில் மட்டும் அல்ல, கவிதா உலகத்திலும் உலவுகின்றவர் போல பேசிவந்திருக்கிருர்கள். அதைப் பார்த்தும் மற்றவர்களும் "பிரித்துக் கொடுக்க வேண்டுமென்று சொல்கிறீர்களே, ஏழ்மையைப் பிரித்துக்கொடுப்பதா? வறுமையைப் பிரித்துக்கொடுப்பதா? செல்வத்தைப் பிரித்துக் கொடுக்கவேண்டு மென்ருல் எங்கே செல்வம் இருக்கிறது?" என்று கேட்டு வந்திருக் கிருர்கள். நம்முடைய நிதி அமைச்சர் அவர்களுடைய கருத்து, பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் கொண்டிருக்கிற கருத்துக்கு ஓரளவு மாறு பட்டது என்று நான் கருதுகிறேன். நான் மாறுபட்டது என்று சொல் கிறேனே தவிர முரண்பட்டது என்று சொல்லவில்லை. ஆகையால் இன்னும்

[Sri C. N. Annadurai] [8th September 1960

சிரமம் எடுத்துக்கொண்டால் தம்முடைய கருத்துக்கு பண்டித நேரு அவர்களை இசையச் செய்ய முடியும் நம்முடைய நிதி மந்திரி அவர்களால். ஆகவே அந்தப் பொறுப்பையும் இவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

(Mr. Speaker in the Chair.)

இந்தத் தொழில் துறையில் முதலிலே செல்வத்தைப் பெருக்க வேண்டும், அதற்குப் பின் பிரித்துக்கொள்ள வேண்டும் என்று சொல்கிற போது ஜுலை மாதம் முழுவதும் உற்பத்தியைப் பெருக்க வேண்டும், ஆகஸ்டு மாதம் முழுவதும் கணக்குப் பார்க்க வேண்டும், செப்டம்பர் மாதத்தில் பிரித்துக் கொடுக்கவேண்டும் என்று சிலர் தவருக நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். உற்பத்தியைப் பெருக்குவது ஒரு சமயம், பிரித்துக் கொடுப்பது மற்றோர் சமயம் என்றல்ல. இரண்டும் ஒரே காலத்தில்; இரண்டும் தொடர்ந்து செய்யப்பட வேண்டிய விஷயங்களாகும். இதையும் நிதி அமைச்சர் அவர்கள் தெளிவுபடுத்தியதற்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைத் துவக்குகிற நேரத்தில் நாம் எந்தச் சூழ்நிலையில் இருக்கிறோம் என்பதையும் கவனித்துப் பார்க்க வேண்டியது முக்கியம். இன்னும் வைதீக பாஷையில் சொல்வதானால் சுப சகுனத்தில் துவக்கப்படுகிறதா, அபசகுனத்தில் துவக்கப்படுகிறதா என்று பார்க்க வேண்டும். பொருளாதார பாஷையில் சொல்ல வேண்டுமானால் இவ்வளவு பெரிய பாரத்தைத் தாங்குவதற்குரிய சக்தி உடையதாக சமுதாயத்தைத் தயாரித்துவிட்டு, இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறோமா இல்லையா என்று பார்க்க வேண்டும். அப்படிப் பார்க்கும்போது வைதீக பாஷையை நான் பயன்படுத்த விரும்பவில்லை. நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் ஓரளவு வைதீக கோலத்திலே இன்று காணப்பட்டாலும்கூட (சிரிப்பு) பொருளாதார பாஷையை பயன்படுத்த விரும்புகிறேன். (குறுக்கீடு வைதீகத்தில் கெடுதல் இல்லை.) அதனால்தான் வைதீகம் என்று சொன்னேன், அடைமொழி, வைக்கவில்லை.

10-30 a.m.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் துவக்கப்படும் நேரத்தில் எல்லா விலைவாசிகளும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே இருந்ததைவிட 100-க்கு 20 பங்கு உயர்ந்திருக்கிறது. இந்த நேரத்தில் நாம் இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைத் தீட்டியிருக்கிறோம். முன்னாலே 100 ரூபாயில் முடிக்கப்படக்கூடிய காரியத்தை இப்பொழுது இயற்கையாகவே பொருள்களின் விலை ஏறி இருப்பதால் 120 ரூபாய் செலவிட்டால்தான் முடியும். இதைப்பற்றிய விவரங்களை நிதி அமைச்சர் அவர்கள் ஆயிரம் கோடி எப்படி வளருகிறது என்று குறிப்பிட்டார்கள். ஆனால் நான் எடுத்துச் சொல்வது மூன்றாவது திட்டத்தைத் தீட்டுகிற நேரத்தில் அப்படிப்பட்ட நெருக்கடிக்கு இடையிலேதான் நாம் திட்டம் தீட்டுகிறோம் என்பதுதான். அதைத்தான் நான் குறிப்பிட விரும்புகிறேன். அதைப்போலவே அன்னிய செலாவணிப்பிரச்னையில் நமக்கு முன்பு இருந்ததைவிட சிக்கல் அதிகரித்திருக்கிறதேதவிர அதிகமான அளவு அந்த சிக்கல் தீர்க்கப்பட்டதாகத்தெரியவில்லை. வெளியே இருந்து வரவழைக்கும் பொருளினுடைய அளவை கட்டுப்படுத்த முடியும் எனினும் அன்னிய செலாவணி விஷயத்தில் சிக்கல் வளர்ந்திருக்கிறது. மூன்றாவது ஐந்தாண்டுச் திட்டத்தில் நமக்கு அன்னிய செலாவணி அதிகம் தேவையாக இருப்பதால் அப்படிப்பட்ட நெருக்கடியைச் சமாளித்துக்கொண்டுதான் திட்டத்தை நிறைவேற்ற வேண்டியவர்களாக இருக்கிறோம். இதிலே வெளி நாட்டிலிருந்து வரவழைக்கும் பொருளினுடைய அளவையும் இங்கிருக்கிறது வெளி நாட்டுக்கு அனுப்பப்படவேண்டிய பொருளினுடைய அளவையும் வகைப்படுத்த வேண்டும். இங்கிருந்து வெளிநாட்டுக்கு அதிகமான பொருளை அனுப்பி அன்னிய செலாவணியைச் சம்பாதித்து ஆக வேண்டும். ஆகையால் இந்த இரண்டு, மூன்று முக்கியமான காரியங்கள் சரியாக நடத்தப்படவேண்டும். இதைச் சொல்லும் நேரத்தில் இவைகளை நடத்தமுடியுமா, முடியாதா என்ற ஐயப்பாட்டுக்காக அல்ல, இவைகளை நடத்துகிற பொறுப்பு இந்த மாநில அரசுக்கு இல்லை,

8th September 1960] [Sri C. N. Annadurai]

மாநில அரசிலே சில அமைச்சர்களுக்கு அதற்கேற்ற திறமை இருக்கலாம், மத்திய அரசிலே செய்யும் காரியங்களிலே பல குளறுபடியாக இருக்கின்றன என்று உள்ளூரத் தெரிந்தும் இருக்கலாம், ஆனால் அன்னிய செலாவணி விஷயத்தைக் கட்டுப்படுத்தும் விஷயம் ஏற்றுமதி, இறக்குமதி விஷயங்களிலே ஏற்றுமதியை அதிகப்படுத்தி, இறக்குமதியைக் கட்டுப்படுத்தக்கூடிய அந்தக் காரியம் செய்கின்ற விஷயத்தில் அதிகாரம் மாநில அரசுக்கு இல்லாத காரணத்தால் இந்த விஷயத்திலே மத்திய அரசாங்கம் எவ்வளவு திறமையாக நடக்கிறார்களோ அதைப் பொறுத்துத் தான் நம்முடைய மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு ' உயிர் இருப்பதா? இல்லாமல் போவதா ? குத்துயிராக இருப்பதா ?' என்று தீர்மானிக்கப் படவேண்டியிருக்கிறது.

ஆகையால்தான் பல தடவை எடுத்துச் சொன்னதுபோல், இந்த முறையும் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். எப்படித் தனிப்பட்ட அங்கத்தினர்கள் அமைச்சர்களைப் பார்த்து, "இந்த ஏரிக்கு கரையை உயர்த்திக் கொடுங்கள், குளத்தின் படிக்கட்டை அகலப்படுத்திக்கொடுங்கள், அமோனியம் சல்பேட் கொடுங்கள்" என்று கேட்கிறார்களோ, அதைப் போல் இங்கே இருக்கும் அமைச்சர்கள் அங்கே சென்று 'எங்களுக்கு இன்னது இன்னது தேவை' என்று கேட்கிற நிலை இருக்கிறதே தவிர பொருளாதாரப் பிரச்னைகளைத் தீர்க்கத்தக்க அளவிற்கு இந்த மாநில அரசுக்கு அதிகாரம் இல்லை. அதைச் சொல்லும் நேரத்தில் திருப்பித் திருப்பி இதையே சொல்லிக்கொண்டிருக்கிறார்கள் என்று முன்னாலே எல்லாம் அரு வருப்பு அடைந்தார்கள். ஆனால் இந்த முறை நிதி அமைச்சர் அவர்கள் அருவருப்பு அடையமாட்டார்கள் என்று கருதுகிறேன். அவர்களே சொல்லியிருக்கிறார்கள்—" நேஷனல் டவலப்மெண்ட் கவுன்சிலில் உள்ள வர்கள் அருவருப்பு அடைந்தாலும் பரவாயில்லை, இது என்ன பெரிய நீயூசன்ஸாக போய்விட்டதே என்று எண்ணினாலும் பரவாயில்லை. நான் திருப்பி திருப்பி ரீஜினல் டிஸ்பாரிடி போக வேண்டும் போகவேண்டு"மென்று எடுத்துப் பேசினேன் என்று சொன்னார்கள். அவர்கள் சொல்லுவதையே அருவருப்பாகக் கருதுவார்கள் என்று ஏற்படுமானால் நான் சொல்லுவதை அருவருப்பாக கருதுவதிலே ஆச்சரியம் ஒன்றும் இல்லை. அருவறுப்பாக உள்ள கசப்பான உண்மைகளை எடுத்துச் சொல்லத்தான் வேண்டுமென்ற முடிவுக்கு கனம் நிதி அமைச்சர் அவர்கள் அந்த இடத்தில் வந்திருப் பார்களானால் அதே முடிவுக்கு நாங்கள் வந்தால் அதைத் தவறாகக் கருதமாட்டார்கள் என்று கருதுகிறேன். திரும்பத் திரும்ப சொல்லு கிறேன். இந்த மாநில அரசுக்கு பொருளாதாரத் துறையைச் செம்மைப் படுத்தத்தக்க அதிகாரம் இல்லாத காரணத்தால்தான் எவ்வளவு திட்டங்கள் தீட்டினாலும் அதை நிறைவேற்றிச் செல்வதிலே ஏற்படக்கூடிய சாதக பாதகம் அத்தனையும் மத்திய சர்க்கார் எப்படி நடக்கிறார்களோ அதைப் பொருத்திருக்கிறது. உதாரணத்திற்குச் சொல்லுவேன்—நம்முடைய தொழில் இங்கே வளரவேண்டுமானால், நம்முடைய செல்வம் பெருக வேண்டுமானால் துறைமுகங்கள் எல்லாம் விருத்தி செய்யப்பட வேண்டும். முக்கியமாக தூத்துக்குடித் துறைமுகம்—சேது சமுத்திரத் திட்டத்தோடு இணைத்திருக்கும் திட்டம்— நிறைவேற்றப்படவேண்டுமென்று நாம் எடுத்துப் பேசுகிறோம். நெய்வேலி நிலக்கரி திட்டத்தை விரைவில் நிறை வேற்றி அதன் அளவையும் வகையும் அதிகப்படுத்த வேண்டுமென்று சொல்லுகிறோம்.

சேலத்து இரும்பை உருக்குத் தொழிலுக்குப் பயன் படுத்திவிரை வில் முன்னேற்றம் காணவேண்டுமென்று நாம் எடுத்துப் பேசுகிறோம். இந்த மூன்று பிரச்னைகளில்—நம் மாநில அரசை நடத்திச் செல்கிறவர் களை நான் பணிவுடன் கேட்டுக்கொள்கிறேன் உங்களுக்குள்ள அதி காரங்கள் என்ன? மனுப்போடுவதைத் தவிர, மகஜர் அனுப்பு வதைத் தவிர, வற்புறுத்துவதைத் தவிர திரும்பத் திரும்ப எடுத்துச் சொல்வதைத் தவிர, உங்களுக்கு இருக்கும் அதிகாரங்கள் என்ன என்பதை எண்ணிப் பார்த்தால் அதிகாரம் அற்ற ஆட்சியை நடத்திக்கொண்டிருக்கிறீர்கள் என்பதை, நான் உணர்ந்திருப்பதைப் போலவே நீங்களும் உணர்வீர்கள் என்று கருதுகிறேன். ஆகையால்தான் சென்னை ராஜ்யத்திற்குத் தரப்பட்டிருக்கும்

[8th September 1960 [Sri V. K. Ramaswamy Mudaliyar]

கைவிட்டார்கள் ? "செல்ப் ஹெல்ப்", **(Self help)** "டிரஸ்டிஷிப் தியரி" **(Trusteeship theory)** என்றெல்லாம் சொல்லியிருக்கிறார்கள். அவைகளை யெல்லாம் நாம் இப்பொழுது கைவிட்டுவிட்டோம். அவைகளை ஆதரிப்பதே இல்லை. அவைகளைப் பற்றிக் கவனம் செலுத்துவதே கிடையாது.

நிதி அமைச்சர் அவர்கள் ஆரம்ப உரையில் அத்தியா வசிய மில்லாத சில பொருள்களெல்லாம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் உற்பத்தியாகி விரயம் ஆயிற்று என்றெல்லாம் சொன்னார்கள். உண்மை. அதற்குக் காரணம் என்ன ? "அட்மினிஸ்டிரேட்டிவ் மெஷினரி" சரிவர நடக்கவில்லையா, சரிவர பரிபாலிக்கப்படவில்லையா ? சரியான திறமை சாலிகள் இல்லையா ? அதில் ஏன் கவனம் செலுத்தவில்லை ? மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் அம்மாதிரி நடக்காது என்பதற்கு என்ன உத்தரவாதம் ? மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இவை எல்லாம் சரிவர நடப்பதற்கு என்ன செய்யப்போகிறார்கள் ? இவைகளையெல்லாம் அமைச்சர் அவர்கள் சொல்லவேண்டும். முக்கியமாக நம்முடைய திட்டங்களை நிறை வேற்றுவதற்குப் போதுமான நிபுணர்கள் இல்லை. அது ஒரு பெரிய குறை. ரஷ்யாவில் ஆரம்ப காலத்தில் அம்மாதிரி நிபுணர்கள் இல்லாததனால் தான் அப்போது போட்ட திட்டங்கள் சரிவர நடக்கவில்லை. அம்மாதிரி இல்லாமல் நமக்குப் போதுமான நிபுணர்களை ஏற்படுத்திக்கொண்டு இந்தத் திட்டங்களை யெல்லாம் ஆரம்பிக்க வேண்டும். அம்மாதிரி இல்லாத காரணத்தினால் தான் நம்முடைய திட்டங்கள் சரிவர நிறைவேறவில்லை.

(Sri S. M. Annamalai in the chair.)

அது தவிரவும், தேசிய அபிவிருத்தி, சமுதாய நலத் திட்டங்கள் மூலம், பிளாக்குகள் ஏற்பட்டு, அதன் காரணமாக, லட்சக்கணக்கான பொருள் 11-30 a.m.
கள் விரயமாகிறது. இம்மாதிரியான திட்டங்கள் காரணமாக ப்ளாக்குகள் ஏற்பட்ட இடங்களில், என்ன சதவிகிதம் மக்களுக்கு நன்மை ஏற்பட்டிருக் கிறது ? முன்பு, மத்திய இலாகா அமைச்சர் ஸ்ரீ டே அவர்கள் சொன்னார் கள், அதாவது அநேகமாக இந்தத் திட்டங்களினால் நன்மைகள் அதிகமாக ஏற்படவில்லை, நல்ல முறையிலே திட்டங்களை நடத்த வேண்டும் என்று. இப்பொழுது, மூன்றாவது திட்டத்தின் கீழ், கோடிக்கணக்கான ரூபாய்கள் இந்தத்திட்டங்களுக்கு செலவாக இருக்கிறது. இந்தத்திட்டங்களெல்லாம் நல்ல முறையிலே நடத்தப்படுமா, கிராமங்கள் எப்படி நகரங்கள் ஆக முடியும், மக்களுக்கு என்னென்ன நன்மைகள் ஏற்படமுடியும் என்பதையெல்லாம் அமைச்சரவர்கள் தங்கள் பதிலில் சொல்ல வேண்டுமென்று தாழ்மை யோடு கேட்டுக்கொள்ளுகிறேன். அதைப் பற்றி அநேக இடங்களில் பேசி யாகி விட்டது.

ப்ளாக்குகள் செலக்ஷன் செய்வதிலும், பிற்போக்கான இடங்கள் அப் படியே இருக்கின்றன; முற்போக்கான இடங்களை தான் எடுத்துக் கொள்ளு கிறார்கள். பிற்போக்கான இடங்களை எடுக்கப்படாமல் விடப்பட்டு இருக்கின்றன. ப்ளாக்குகள் பொறுக்குவதில், கட்சி நோக்கோடு செய்கிறார்கள். அது ரொம்பத் தப்பானது. கட்சி நோக்கத்தை விட்டுவிட்டு, உண்மையிலேயே மக்களுக்கு நன்மை செய்ய வேண்டுமென்ற நோக்கத்தோடு செய்ய வேண்டும். ஜில்லா ப்ளானிங் கமிட்டிகளில் அநேக சிபாரிசுகள் செய்யப் படுகின்றன. ஆனால், அவைகள் பின்னால் நிராகரிக்கப்படுகின்றன. அப்படிக்கெல்லாம் இருந்தால், எதிர்க்கட்சிக்காரர்கள், மற்ற கட்சிக்காரர் கள் எப்படி அரசாங்கத்துடன் ஒத்துழைக்க முடியும் என்று கேட்கிறேன். ஆகவே, இந்த விஷயங்களில் கட்சி நோக்கோடு பார்க்காமல், ப்ளாக்கு களை பிற்போக்கான பிராந்தியங்களுக்கு விஸ்தரித்து, கூடிய சீக்கிரம் மக்களுக்கு நன்மை செய்ய வழி தேடவேண்டும்.

மக்கள் மனுக்கள் கொடுத்தால், உடனுக்குடன் பதில் வருவதில்லை. எத்தனையோ தடவைகள் இந்த மன்றத்திலேயே அநேக அங்கத்தினர்கள் அதைப் பற்றிப் பேசியிருக்கிறார்கள். ஆனால், குறைகள் அப்படியே இருக் கின்றன. வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கவில்லை. அவைகளையும் கவனிக்க வேண்டும்.

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [8th September 1960

மொத்தம் இப்பொழுது நம் நாட்டில் இருக்கும் கடன் 4,964 கோடி ரூபாய், அல்லது சுமார் 5,000 கோடி. அவ்வளவு கடன் இருந்தும், இன்னும் கடன் வாங்கினுல், எப்படித் திருப்பிக் கொடுப்பது? இப் பொழுது என்ன நினைக்கிருர்கள் என்றுல், திட்டங்கள் அத்தனையும் நாமே வகுத்து, நம் காங்கிரஸ் ஆட்சி காலத்திலேயே செய்து முடிக்க வேண்டும் என்று ஆளும் கட்சியில் இருப்பவர்கள் நினைக்கிருர்கள். அதன் காரணமாக மக்கள் கஷ்டப்படுகிருர்கள். "Do not sacrifice the present for the future" அதனுல் கஷ்டப்படுகிறவர்கள் மக்கள். எதிர்காலத் தில் வருபவர்களுக்கு இவர்கள் ஒன்றும் விட விரும்பவில்லே. நாமே செய்து விடவேண்டும் என்கிருர்கள். நன்மை செய்ய வேண்டும். ஆனுல், எந்தக் காலத்தில் எவ்வளவு காலத்தில் எவ்வளவு செய்ய வேண்டும் என்பதையும் யோசிக்க வேண்டும். வரிகளேப் போடக்கூடாது என்று சொல்லவில்லே. ஆனுல், மக்கள் சுமக்கும் அளவுதான் போடப்படவேண்டும் என்கி ருேம். அவர்களது கொடுக்கும் திறனேயும் கவனிக்கவேண்டும். ஆகவே தான் அதிகவரிப் பளுவை எதிர்க்கிருேம்.

திட்டம், திட்டம் என்று போட்டு மக்களிடம் ஒரு திட்ட மனப்பான்மை யைக் கிளப்புகிருர்கள். திட்டம் காரணமாக பல நன்மைகள், நல்ல காரி யங்கள் ஏற்படும் என்று எண்ணி மக்கள் ஏமாறுகிருர்கள். "Control of production of wealth is the control by government of human life itself." ஆகவே, திட்டம் போடுவதால் மக்கள் முன்னேறுவதற்குப் பதில், மக்கள் அடிமைகளாக்கப்படுகிருர்கள். அந்த மனப்பான்மை போய் ஆகவேண்டும்.

(Mr. Speaker in the Chair.)

இவைகளினுல் பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. இப்பொழுது சமீபத்தில் மத்திய சர்க்கார் ஊழியர்கள் வேலே நிறுத்தம் செய்தார்கள். வேலே நிறுத்தம் செய்ய வேண்டுமென்று சொல்லவில்லே. ஆனுல், அதன் காரணமென்ன? விலேவாசி உயர்விஞல் தான் என்பதை மறுக்க முடி யாது. விலேவாசி உயர்விஞல் அவர்களுக்கு, அம்மாதிரியான நிலே ஏற்பட்டது. அம்மாதிரி நிலே ஏற்படக்கூடாது.

இந்த திட்டத்தின் உண்மையான நோக்கம் என்னவென்றுல், இது வோட்டுகாரணமாக, எலெக்ஷன் காரணமாகப் போடப்பட்ட திட்டம் என்று தான் ஊகிக்க வேண்டியிருக்கிறது. 1962 முதல் 1967 வரை திட்டம் என்றுல், அவர்கள் அதுவரையில் தாங்களே ஆட்சியில் இருக்கப் போகி ருேம் என்று செய்திருக்கிருர்கள். ஆகவே, திட்டம் மக்கள் நன்மைக்காக செய்யும் முறையில் அமையவில்லே. இந்தத் திட்டங்கள் காரணமாக, பண வீக்கம் ஏற்பட்டு, விலேவாசிகள் உயரப் போகின்றன. இப்படி விலேவாசிகள் உயர்ந்து கொண்டே போனுல், கண்ட்ரோல் வரும். கண்ட்ரோல் வந்தால், அதன் காரணமாக கருப்பு மார்க்கெட்டு வரப்போகிறது. இப்பொழுது இன்கம்-டாக்ஸில் பார்க்கிருேம். சுமார் 1,000 கோடி வரை பதுக்கப் பட்டிருக்கிறது என்றும், வெளிவரவில்லேயென்றும் மத்திய சர்க்கார் அறிக் கைகளில் பார்க்கிருேம். 295 கோடி வரை இன்கம் டாக்ஸ் வசூலிக்காமல் இருக்கிறது என்று பார்க்கிருேம். இது பரிதாபமாக இருக்கிறது. இந்தத் திட்டங்கள் போட்டாலும், பணக்காரர்கள் பணக்காரர்களாகவே இருக்கிருர் கள், ஏழை ஏழையாகவே இருக்கிருர்கள். அதைத் தடுக்க ஒரு வழி யையும் காணேம்.

இப்பொழுது சமீபத்தில், கண்ட்ரோல் விஷயமாக, புட் அண்ட் அக்ரி கல்சர் மினிஸ்டர் பாராளுமன்றத்திலே, மத்திய சர்க்கார் சார்ப்பில் சொல்லி இருக்கிருர்கள், இந்தக் கண்ட்ரோல் வருவது பற்றி. அவர்கள் சொல்வது—

8th September 1960] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

The Hon. Food Minister Sri S. K. Patil of the Central Government said as follows:—

"People talk of State Trading and the State Trading is responsible for the rise in prices. If we are to artificially peg down the prices, you have to create a machinery for which the machinery itself add to the prices of commodities. But State Trading in the Punjab Government brought them a profit of 60 lakhs last year.

When the House asked him why the prices went up, he said, 'if you employ a costly machinery, the prices will go up and so we require a State Trading of the type in which we have to help the prices in not going up and be helpful to farmers'."

இம்மாதிரிச் சொல்கிறார்கள் திட்டவட்டமாக. கண்ட்ரோல்கள் வருவதால் இம்மாதிரியான குழப்பங்கள் வருகிறது. அதில் கண்டிப்பாகக் கவனம் செலுத்தியாக வேண்டும்.

விவசாயிகளுக்கு உற்பத்தியைப் பெருக்க நாம் என்ன செய்திருக்கிறோம்? நம் தமிழகத்தில், விவசாயிகள் கஷ்டப்படுகிறார்கள். அவர்களுடைய தேவைகளெல்லாம் பூர்த்தியாகவில்லை. சிறு நீர்ப்பாசன வசதிகள் செய்து கொடுக்கப்படவில்லை. நல்ல விதைகள் கிடையாது. நல்ல உரங்கள் கிடைக்கவில்லை. இவைகளை விவசாயிகள் ப்ளாக் மார்க்கெட்டில் வாங்க வேண்டியிருக்கிறது. அதனால் கஷ்டப்படுகிறார்கள். இந்த நிலையில் உணவுப் பொருளைப் பெருக்கி இருக்கிறோம் என்று சொல்வது தவறான பேச்சு, நல்ல பேச்சல்ல. உணவு உற்பத்தியாகவே இல்லை. ஏதாவது தக்க நடவடிக்கைகள் எடுத்தாக வேண்டும். மூன்றாவது திட்டத்தின் கீழ் 500 ட்ராக்டர்கள் வாங்குவதாகச் சொல்லி இருக்கிறோம். வரும் என்கிறார்கள். இதற்கு மத்திய சர்க்கார் அந்நியச் செலவாணி கொடுப்பார்களா, இது எப்பொழுது நிறைவேறும் என்பதைப் பற்றியெல்லாம் சிந்திக்க வேண்டும். அம்மாதிரி அந்நியச் செலவாணி அதிகமாக நமக்குக் கிடைக்காத காரணத்தால்தான் நாம் அதிகமாக கஷ்டப்பட வேண்டியதாக இருக்கிறது. அதைப்பற்றி அதிகம் சொல்ல வேண்டியதில்லை. அதனால் நாம் ரொம்பவும் பரிதாபகரமான நிலைமையில் இருக்கிறோம்.

தவிர மத்திய சர்க்காருடைய உணவு மந்திரியின் தலைமையில் டில்லியில் ஒரு மீட்டிங் நடந்தது. அதில் என்ன சொல்லி இருக்கிறார்கள் என்றால்

"At the Agricultural Ministers' Conference it was stated that 'it showed utter lack of co-ordination and co-operation among the Central Ministers on the vital problem of food production.' The Third Plan makes provision for 625 crores of rupees for Agriculture, 400 crores was earmarked for Community Development and National Development Works, 600 crores for major medium irrigation projects. It was also stated that there was no co-ordination between one department and another. Here also is the same thing."

அதைப்போல் நம்முடைய ராஜ்யத்தை எடுத்துக் கொண்டாலும் கோவாபரேஷனும் கோஆர்டினேஷனும் இல்லாமல் ஒவ்வொரு டிபார்டுமென்டுக்கும் பேப்பர் சுற்றிக் கொண்டே தான் இருக்கிறது. ஒரு டிபார்டுமென்டை கேட்டால் மற்றொரு டிபார்டுமென்டில் இருக்கிறது என்று சொல்லுகிறார்கள். ஆகவே ஒவ்வொரு டிபார்டுமென்டிலும் கோஆர்டினேஷனோ அல்லது கோவாபரேஷனோ கிடையாது. அதன் காரணமாகத் தான் பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. உதாரணமாக உணவு இலாகாவை எடுத்துக் கொள்ளுவோம். சுமார் இருபது வருஷங்களுக்கு முன்னதாக அது அமைக்கப்பட்டது. சுமார் இருபது வருஷ காலமாக அந்த இலாகா நல்ல வேலைகளைச் செய்து வருகிறது. பி.ட்ப்ள்யூ.டி. இலாகாவில் தேவையில்லாத

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [8th September 1960

ஆபீசர்களை அந்த இலாகாவிற்குத் தள்ளுகிறார்கள். அதன் காரணமாக சமீப காலத்தில் அது நன்றாக வேலை செய்யவில்லை. கல் நாட்டு விழா, திறப்பு விழா அவர்களுக்குத் தெரியாது. குளங்களை அவர்கள் மராமத்து செய்கிறார்கள். நீர்ப்பாசன வசதியெல்லாம் அவர்கள் செய்து கொடுக்கிறார்கள். அப்படி இருந்தும் பி.ட்ப்ள்யூ.டி.க்கும் உணவு உற்பத்தி இலாகாவுக்கும் கோஆர்டினேஷன் கிடையாது. அதன் காரணமாக ரொம்பவும் கஷ்டப்படுகிறார்கள். அதை ஏன் தனி டிபார்ட்மெண்டாக ஏற்படுத்தக் கூடாது என்று கேட்கிறேன். சிறிய நீர்ப்பாசன வசதிகளைச் செய்து கொடுக்க கூடிய வேலைகளை அவர்களுக்குக் கொடுக்கலாம். அவர்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுத்துக் குளங்களை மராமத்து செய்வதற்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுக்க வேண்டும். அதற்கு வேண்டிய திட்டங்களை உடனடியாகப் போட வேண்டும். இதைப்பற்றி அநேகம் அங்கத்தினர்கள் பல தடவை பேசியிருக்கிறார்கள். நாளது வரையில் ஒன்றும் நடந்ததாக இல்லை.தவிர அவர்களை யெல்லாம் அடிக்கடி மாற்றுவதன் காரணமாக அவர்களிடத்தில் பெரிய அருவருப்பு ஏற்பட்டிருக்கிறது. அதைப்பற்றி கனம் அமைச்சர் அவர்கள் நன்றாகப் பரிசீலனை செய்ய வேண்டும். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் நீர்ப்பாசன வசதிக்காக மத்திய சர்க்காரிடமிருந்து இரண்டு கோடி ரூபாய் வாங்குவதாகப் ப்ளான் போட்டிருக்கிறார்கள். ஆனால் நாம் எவ்வளவு தொகை செலவழிக்கிறோமோ அவ்வளவு தொகையையும் வாங்குவதற்குக் கண்ணும் கருத்துமாக இருக்க வேண்டும். நமக்கு அவர்கள் கொடுக்கும் தொகையையும் எவ்வளவு சீக்கிரத்தில் செலவு செய்து திட்டங்களை முடிக்க வேண்டுமோ அவ்வளவு சீக்கிரத்தில் முடிப்பதற்கு நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும். அப்படி எடுத்துக் கொண்டு இன்னும் அதிகமாக வாங்கிக் கொள்வதற்கு கண்ணும் கருத்துமாக இருக்கவேண்டும். அதிகமாகச் செலவு செய்வதற்கு வசதி செய்து கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதே மாதிரி தான் செய்யார், பாலார், அப்பர் பெரியார் திட்டங்கள். இம்மாதிரியான திட்டங்களையெல்லாம் உடனடியாக எடுத்துக்கொள்ள வேண்டும், என்பதுதான் என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். ஹைவேஸ் டிபார்ட்மென்டை நேஷனல் ஹைவேஸ் என்று போட்டு அதை மத்திய சர்க்காரிடம் கொடுத்திருக்கிறார்கள். அதே மாதிரி நம்முடைய நாஷனல் வாட்டர் வேஸையும், இண்டர் ஸ்டேட் வாட்டர்ஸ் என்று சொல்லக் கூடியதை மத்திய சர்க்காருக்குக் கொடுத்துவிடலாம். அவர்கள் அதையெல்லாம் எடுத்துக் கொண்டு வேண்டிய நீர்ப்பாசன வசதிகளை எல்லாம் செய்வதற்குப் பரிசீலனை செய்ய வேண்டும், அப்படிச் செய்யவும் முடியும். இதன் முன்னால் ஸர். சி. பி. ராமசாமி அய்யர் காலத்திலிருந்து கங்கையையும் காவிரியையும் சேர்க்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். அதன்படி நாஷனல் வாட்டர் வேஸை மத்திய சர்க்காருக்கு விட்டு விட்டு இந்த மாகாண நீர்ப்பாசன வசதியை மத்திய சர்க்காரை விட்டு செய்யச் சொல்ல வேண்டும். அதற்கு வேண்டிய பரிசீலனையைச் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். இப்பொழுது பரம்பிக்குளம் திட்டத்தை ஒருவிதமாக முடித்துக் கொண்டிருக்கிறோம். அவர்களுக்கு நாம் மூன்றில் ஒரு பங்கோ அல்லது நாலில் ஒரு பங்கோ ஜலம் கொடுத்தாலும்—அவர்களுக்கு நாம் ஏதோ அதிகமாக விட்டுக் கொடுத்துவிட்டதாகக் கேள்வி—நமது மலைப் பிராந்தியத்தில் ஜலம் ஆரம்பித்து வருவதை விட்டுக்கொடுத்து விட்டதாக ஒரு பிரச்னை எங்கு பார்த்தாலும் இருக்கிறது—அது எப்படி இருந்தாலும் அந்தத் திட்டத்தை சீக்கிரத்தில் ஆரம்பித்து அதை உருவாக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். இப்பொழுது ஒரு விதத்தில் அந்தத் திட்டத்தை உருவாக்கியதற்கு கனம் அமைச்சர் அவர்களை நான் பாராட்டுகிறேன். நாஷனல் வாட்டர் வேஸை மத்திய அரசாங்கத்தின் கீழ் கொண்டு வந்தால் இப்படி மாகாணங்களுக்கு இடையே ஏற்படக்கூடிய சச்சரவுகள் எல்லாம் இல்லாமல் தீர்ந்து போய் விடும். ஆகவே இதைப்பற்றி யோசிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

நேற்று திரு. கலியாணசுந்தரம் அவர்கள் பேசும்போது சுமார் 156 கோடி ரூபாய் ரயில்வே போக்குவரத்துக்கு ஒதுக்கி இருக்கிறார்கள் என்றும் ஆனால் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நம்முடைய மாகாணத்திற்கு 92 லட்சம் ரூபாய் ஒதுக்கிருக்கள் என்றும், அதில்

8th September 1960] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

சென்னைக்கு எவ்வளவு ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று பார்த்தால் ஒன்றுமே இல்லை என்றும் அதாவது ஒரு நயா பைசா கூட இல்லை என்றும் குறிப்பிட்டார். அதைப் பார்த்தால் அது பரிதாபகரமாகத் தான் இருக்கிறது. ஆனால் மத்திய சர்க்காரில் என்ன சொல்லுகிறார்கள் என்றால் மதராஸைப் பற்றி ப்ராப்ளம் இல்லை என்று சொல்லுகிறார்கள். நாம் பேசாமல் இருக்கிறோம், சண்டை போட்டு வாங்கவில்லை அதனால் ப்ராப்ளம் இல்லை என்று சொல்லுகிறார்களா என்பது தெரியவில்லை. அதைப்பற்றி சந்தேகமாக இருக்கிறது. திரு. அண்ணாதுரை அவர்கள் பேசும்போது நாம் அவர்களிடம் சண்டை போட்டு வாங்கி வரவேண்டும் என்று சொன்னார். ஆகவே மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு நமக்குக் கிடைப்பதை வற்புறுத்திக் கேட்டு வாங்கிகொள்வதோடு கூட இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் நாம் வாங்காமல் விட்டுப்போன தொகையையும் சேர்த்து வாங்குவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். அப்படி வாங்கி வந்து எவ்வளவு தூரம் நம்முடைய போக்குவரத்தை முன்னேற்றம் செய்ய வேண்டுமோ அதைச் செய்ய வேண்டும். அந்த முறையில் தாம்பரம் விழுப்புரம் பகுதியில் இரட்டை மின்சாரப் பாதையை உடனடியாக அமைக்க நடவடிக்கை எடுத்துக் கொண்டாக வேண்டும். மேலும் தூத்துக்குடி சேது சமுத்திரம் முதலிய மைனர் போர்டுகளை விருத்தி செய்வதற்கு எவ்வளவு தொகையை வேண்டுமானாலும் செலவு செய்து விருத்தி செய்யவேண்டும். இவைகளையெல்லாம் பெருத பட்சத்தில் நமக்கு இருக்கிற அநேக விதமான கஷ்டங்கள் எல்லாம் தீராது. பொருளாதாரத்தில் முன்னேற்றமடைய முடியாது.

தவிர, காடு வளர்ப்புத் திட்டம் சரிவர நடைபெறவில்லை என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். அநேக காடுகள் எல்லாம் இன்னும் சரிவர பராமரிக்கப்படவில்லை. முந்திரிச் செடிகளை வைப்பதில் முக்கியமாகக் கவனம் செலுத்திக் கொண்டு வருகிறார்களே தவிர விவசாயிகளுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுக்க முன்வர வில்லை. விவசாயிகளுக்கு நன்மைகளைச் செய்வதற்கு ஏதாவது திட்டங்களைப் போட்டிருக்கிறோமோ? தவிர சில பிராந்தியங்களில் கால்நடை பண்ணைகள் வைத்தாக வேண்டும். நமக்கு இப்பொழுது பால் பற்றாக்குறை இருக்கிறது. நாடு பூராவும் இருக்கிறது. சென்னையைப் பொறுத்த வரைக்கும் வேண்டிய பால் கிடையாது. கல்கத்தா, பம்பாய் போன்ற இடங்களில் இரண்டு கோடி ரூபாய் செலவில் திட்டம் அமைத்துக் கொடுத்திருக்கிறார்கள். பால் உற்பத்திக்கு என்று நமக்கு ஐந்து அல்லது பத்து லட்சம்தான் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் மூன்றாவது திட்டத்தில் சில கோடி ரூபாயை ஒதுக்கி பண்ணைகளை ஆரம்பிக்கப் போகிறோம் என்று சொல்கிறார்கள், ஆகவே பால் பண்ணையை ஆரம்பிப்பதற்கு முக்கியத்துவம் கொடுத்து அதை செங்கற்பட்டிலோ அல்லது சென்னைக்கு அருகாமையிலோ அமைக்க வேண்டும். இரண்டு கோடி ரூபாய்க்கு குறையாமல் ஒதுக்க வேண்டும். அப்படி ஒதுக்கி அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதற்கு அடுத்தபடியாக மருத்துவசாலைகளை சில இடங்களில் ஏற்படுத்த வேண்டும். பல பிராந்தியங்கள் புறக்கணிக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே பல பிரதேசங்களில் மருத்துவசாலைகளை அமைப்பதற்கு உடனடியாக நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும். அதில் அதிகப்படியான கவனம் செலுத்த வேண்டும். கிராம ரஸ்தாக்கள் எல்லாம் ரொம்பவும் மோசமான நிலைமையில் இருக்கின்றன. அதனால் விவசாயிகள் ரொம்பவும் கஷ்டப்படுகிறார்கள். உணவுப் பொருள்களை வெளியே கொண்டு போவதற்கு வசதி இல்லாமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். அதற்கு உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்றும் கேட்டுக் கொள்ளுகிறேன்.

தவிர நில வரியை அரை சத வீதம் உயர்த்தப்போவதாகக் கேள்விப்படுகிறோம். அப்படி உயர்த்தினால் விவசாயிகள் ரொம்பவும் கஷ்டப்படுவார்கள். அதைப்பற்றி நன்றாக யோசனை செய்து பார்க்க வேண்டும். புது வரியை எந்தக் காரணத்தைக் கொண்டும் போடக் கூடாது என்பதை தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இதைப்பற்றிய மத்திய

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [8th September 1960

சர்க்காருடைய பைனன்சிங் கமிஷனுடன் தீவிரமாக யோசிக்க வேண்டும் நோட்டை அச்சடித்துக் கொண்டே போனால் அதனால் கஷ்டம்தான் ஏற்படுகிறது. அதைக் கை விட வேண்டும். முக்கியமாக ப்ரைஸ் லெவலை கண்ட்ரோல் பண்ண வேண்டும். உற்பத்தியாளர்களுக்கும் அதை உபயோகிக்கிறவர்களுக்கும் நியாயமாக இருக்கக்கூடிய அளவில் விலையைக் கட்டுப்படுத்த வேண்டும். விலைவாசிகள் விஷம் போல் ஏறுவதால் மக்கள் கஷ்டப்படுகிறார்கள். அப்படி உயர்வதைத் தடை செய்ய திட்டம் வகுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். 2,500 கோடி ரூபாய் அந்நிய செலாவணி மூலமாக வாங்கி இருப்பதாகச் சொன்னார்கள். இந்த 2,500 கோடி ரூபாயில் நமக்கு எவ்வளவு வரும். அதைப்பற்றி என்ன திட்டம் போட்டிருக்கிறார்கள் என்பதை அறிய விரும்பு கிறேன்.

முக்கியமாக நம்முடைய மாகாணத்தில் இருந்து எவ்வளவு கேட் கிறார்கள், நாம் எவ்வளவு கொடுக்கப் போகிறோம் என்பதை எல்லாம் அமைச்சர் அவர்கள் சொல்லவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். முக்கியமாக இம்மாதிரி இருப்பது காரணமாக இந்தத் திட்டத்தை வாபஸ் பெறவேண்டும். மக்களுக்கு உடை, உணவு, குடியிருப்பு இடம் ஆகிய மிக அடிப்படையான வாழ்க்கை வசதிகளைக் கொடுக்கக்கூடிய வகையில் திட்டத்தை அமைக்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : கனம் சபாநாயகர் அவர்களே இந்த விவாதத்தில் கலந்துகொண்டு நல்ல உரை வழங்கிய எல்லோருக்கும் என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். என்னுடைய வைதிக கோலத்தைப்பற்றி திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்கள் குறிப்பிட்டார்கள். நான் இத் திட்டத்திற்கு எல்லோருடைய ஆதரவும் வேண்டுமென்று நினைப்பது போல புதுப் பிரயாணத்திற்கும் எல்லோ ருடைய ஆதரவும், நம்பிக்கையும் வேண்டுமென்று விரும்புகிறவன் என்பதை முதலில் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பொறுத்த வரையில் வெவ்வேறு கருத்துடைய மக்களும்கூட இத் திட்டங்களை நிறைவேற்று வதிலே ஒத்துழைப்புக் கொடுக்க முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும் என்பது சர்க்காருடைய கொள்கை. அந்தக் கொள்கை ஓரளவுக்கு வெற்றிபெற்றிருக்கிறது என்பதை இங்கு நடந்த விவாதம் காட்டியிருக் கிறது. அத்தகைய ஒத்துழைப்பு எல்லாத் துறைகளில் இருந்தும் கிடைக் கும் என்கிற நம்பிக்கையூட்டுகின்ற முறையில் இந்த விவாதம் அமைந் திருக்கிறது.

இதிலே இரண்டு கருத்துக்கள் இப்போது நம் முன்னால் இருக்கிறது. ஒரு கருத்து இந்தத் திட்டம் வேண்டவே வேண்டாம் என்று சொல்லக் கூடியது. இதை அனுசரித்துத்தான் எதிர்க்கட்சியில் இருக்கக்கூடிய, ஐ.என்.டி.சி. கட்சித் தலைவரும், உப தலைவரும் பேசினார்கள். இரண்டாவது கருத்து திட்டம் வேண்டும் என்று சொல்லக்கூடியவர்கள். திட்டத்தின் மூலமாகத்தான் நாம் முன்னேற்றம் அடையக்கூடும் என்று சொல்லக் கூடியவர்கள். ஆகையால்தான் முதலிலே திட்டம் வேண்டியதே இல்லை என்று சொல்லக்கூடியவர்களுக்குச் சுருக்கமாகப் பதில் சொல்லவேண்டும் என்று நான் நினைக்கிறேன். இதுபற்றி முன்பே நிறையச் சொல்லியாகி விட்டது. இருந்தாலும்கூட மறுபடியும் அந்தக் கருத்தை வலியுறுத்திய காரணத்தினால் அதுவும் முக்கியமாக திரு. சசிவர்ண தேவர் அவர்கள் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவடைந்தவுடன் இரண்டு வருஷங்கள் பொறுத்திருந்து பார்த்து—அந்தத் திட்டத்தினுடைய பலன் களைக் கணக்குப் போட்டுப் பார்த்து அதற்குப் பிற்பாடு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை ஆரம்பித்தால் என்ன என்ற கருத்தைச் சொன் னார்கள். அதற்கும் பிற்பாடு திட்டம் போடுவதற்கு அவர்கள் ஒத்துக்

8th September 1960] [Sri C. Subramaniam]

கொள்வார்களோ என்னமோ எனக்குத் தெரியாது. (ஸ்ரீ டி. எல். சசிவர்ண தேவர் :—ஒத்துக்கொள்வேன்) சந்தோஷம். கணக்குப் பார்த்த பிற்பாடு இந்த திட்டம் கூடாது என்று சொல்லக்கூடியவர்களும் இருக்கிறார்கள். அவருடைய தலைவர் கருத்து என்னவோ தெரியாது (ஸ்ரீ எம். கல்யாணசுந்தரம் :—வெளியில் உள்ளவர்கள் பேசுவதைப்பற்றி என்ன ? இங்கே உள்ளவர்கள் என்ன சொல்கிறார்கள் என்றுதான் பார்க்க வேண்டும்.) இங்கேயுள்ளவர்கள் சொன்ன கருத்தையும் கொண்டு சொல்கிறேன். இரண்டு வருஷங்களுக்குத் திட்டங்களை ஒத்துப் போட்டுவிட்டு சாங்கோபாங்கமாக அதைப் பரிசீலனைசெய்து அதற்குப் பிற்பாடு செய்வது என்று சொன்னால் அதற்குள் நிலைமை எப்படி ஆகும் என்றும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இப்போதுள்ள நிலைமை போலவே இரண்டாண்டு கழித்தும் இருக்கும் என்றால் அப்படிச் செய்வதில் ஆட்சேபணை இல்லை. நான் முன்பு குறிப்பிட்டது போல மக்களுடைய எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகிக்கொண்டே வருகிறது. அவர்களுடைய வாழ்க்கைத் தரம் சீரழிந்துவிடாமல் இருக்க ஒவ்வொரு நாளும் முயன்றுகொண்டே இருக்கவேண்டியிருக்கிறது. ஒவ்வொரு ஆண்டும் பெருகிக்கொண்டே போகிற 2 சத விகித ஜனத் தொகை அளவுக்காவது நாம் திட்டத்தைப் போட்டாக வேண்டும். இரண்டு ஆண்டுகள் சும்மா இருந்துவிடுவது என்றால் இந்த இரண்டாண்டுக்குள்ளேயே நாம் மூழ்கிப்போய்விடுவோம். மற்ற நிகழ்ச்சிகள் நிச்சயமாக நம்மை மூழ்க அடித்துவிடும். அதில் சந்தேகம் கிடையாது. ஆகையால்தான் திட்டம் போடுவதோடு மட்டும் அல்ல. நம்மோடு போட்டிபோடுகிற சிக்கல்களை, பிரச்னைகளை சமாளித்து முன்னேறுவதற்கு மிகவும் தீவிரமாகச் செயல்பட வேண்டியிருக்கிறது. நம்முடைய கஷ்டங்களை, துன்பங்களை சமாளித்துக்கொள்ள வேண்டும் என்றால் தடைபடாமல் உற்பத்தி சீராகப் பெருகிக்கொண்டே இருக்கும் படியாகச் செய்யவேண்டியிருக்கிறது. ஆகவே தொடர்ந்து திட்டம் போட்டுச் செயல்பட்டுக்கொண்டேதான் இருக்கவேண்டும் என்பதை வலியுறுத்திக்கூற விரும்புகிறேன். திட்டம் வேண்டும் என்பதைப்பற்றி திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்களும் பேசுகின்றபோது திட்டம் வேண்டாம் என்கிற கருத்து மடிந்து போன ஒன்று. பதினெட்டாம், பத்தொன்பதாம் நூற்றாண்டின் கருத்து என்று திட்டவட்டமாகச் சொன்னார்கள். அதேமாதிரி திரு. கல்யாணசுந்தரம் அவர்களும் ஒப்புக்கொண்டு பேசியிருக்கிறார்கள். ஆகையால் நான் மறுபடியும் அந்த வாதத்தை விரிவாக்கவேண்டியது அவசியம் இல்லை என்று கருதுகிறேன். திட்டம் வேண்டும் என்று சொன்னால் சரியான திட்டமாகப் போடவேண்டும், இரண்டாவது அதை நல்லமுறையில் நிறைவேற்ற வேண்டும் என்று சொல்லப்பட்ட கருத்துக்களை நான் முழுக்க முழுக்க ஒப்புக்கொள்கிறேன். அந்தத் திட்டம் நல்லமுறையில் எப்படிப் போட வேண்டுமென்பதைப்பற்றியும், நமக்கு முதல் ஐந்தாண்டுத் திட்டம், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் ஆகிய இரண்டிலும் ஏற்பட்டுள்ள அநுபவத்தை வைத்துக்கொண்டு இந்தத் திட்டத்தை இன்னும் எப்படி அதிகத் திறமையாக நிறைவேற்றுவது என்பதைப்பற்றியும் தீர்மானிக்க வேண்டும். இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களையும் குறைவு இல்லாமல் நிறைவேற்றிவிட்டோம் என்று சொல்வதற்கில்லை. நிறைவேற்றிய குறைந்த திட்டங்களையும் மிக நல்ல முறையில் நிறைவேற்றிவிட்டோம் என்றும் நான் சொல்வதற்குத் தயாராய் இல்லை. குறைபாடுகள் இருக்கலாம். ஒரு திட்டத்தை நிறைவேற்ற வேண்டும் என்று முயற்சிக்கிறபோது நம்மையும் மீறிச் சில காரியங்கள் நடைபெற்றுவிடுகின்றன. அப்படி நமக்கு ஏற்படுகிற சிக்கல்களை எல்லாம் நம்முடைய அறிவுத் திறனைக் கொண்டு, அநுபவத்தை வைத்துக்கொண்டு குறைகளையும் சிக்கல்களையும் நீக்குவதற்கு முழு முயற்சி செய்கிறபோதுதான் வாழ்க்கையே சுவையுடையதாக இருக்கிறது. அப்படிப் போராடுவதுதான் வாழ்க்கை நியதி. ஆகவே சில குறைபாடுகள் இருக்கின்றன என்பதை ஒப்புக்கொள்ளத் தான்வேண்டும். குறைகள் இருக்கட்டும். முதல் திட்டம் பூர்த்தியாகிவிட்டது. இரண்டாவது திட்டம் பூர்த்தியாகிவிட்டது. இவற்றினால் மக்களுக்கு ஏதாவது நன்மை ஏற்பட்டிருக்கிறதா என்கிற முறையிலும் பரிசீலனை செய்ய வேண்டும். அப்படிப் பார்க்கிறபோது ஒரு சிலர் கையில் பணம் குவிந்துவிட்டது என்கிற கருத்து வலியுறுத்தப்பட்டது. அதைக்

[Sri C. Subramaniam] [8th September 1960

கொஞ்சம் நன்ருகப் பரிசீலனை செய்து பார்க்க வேண்டும். கடந்த பத்தாண்டுகளில் எவ்வளவு முன்னேற்றம் அடைந்திருக்கிருேம் என்பது ஒருபுறம் இருக்கட்டும்.

இன்று உணவுத் துறையை எடுத்துக்கொள்ளுங்கள். அத் துறையில் முன்பு இருந்ததை விட, எவ்வளவு கம்மியாக கணக்கு போட்டாலும்கூட, முன்புள்ளதை விட இப்பொழுது உற்பத்தி அதிகமாக பெருகியிருக்கிறது என்று கூறும்போது அதை யாராலும் மறுத்துக் கூற முடியாது. உற்பத்தி பெருகியிருக்கிறது என்று சொன்ஞல் அது ஏதோ ஒரு சில பண்ணைகளில் மட்டுமல்ல. எல்லாப் பண்ணைகளிலும் ஓரளவு உற்பத்தி பெருகியிருப்பதால் மொத்தளவில் விவசாய உற்பத்தி பெருகியிருக்கிறது என்று நான் இன்று சொல்ல முடிகிறது. அந்த உற்பத்தியின் பயனை விவசாயத்தில் ஈடுபட்டிருக்கக்கூடியவர்களும், சிறு நிலச்சுவான்தாரர் களும், விவசாயிகளும், கூலி வேலை செய்பவர்கள் ஒரு புறமிருக்கட்டும், எல்லோரும் உற்பத்தியின் பலனைப் பெற்றிருக்கிருர்கள். இன்று உற்பத்தி பெருகியிருக்கிறது என்று கூறும்போது அது யாருக்காக அல்லது அதை யார் பயன்படுத்துகிருர்கள் என்று பார்க்கலாம். பணம் என்ருல் அதை சேமித்து வைத்து இரும்புப் பெட்டியில் பூட்டி வைக்க முடியும். அப்படி பெட்டியில் பூட்டி வைத்துக்கொண்டிருக்கலாம். ஆனல் உணவு தான்யங்கள் எதுவாகயிருந்தாலும் சரி அவற்றை மக்கள் உண்டுதான் தீர்க்க வேண்டியிருக்கிறது. அப்படி, உண்டு தீர்க்க வேண்டுமென்று சொல்லும்போது பணக்காரர்கள் முன்பு சாப்பிட்டதைவிட இப்பொழுது அதிகமாக சாப்பிடுகிருர்கள் என்று சொல்ல முடியாது. இன்று உணவு உற்பத்தி பெருகியிருக்கும்போது, இது வரை அதிகமாக சாப்பிடாதவர்கள் தான் அதிகமாக சாப்பிட முடியுமே தவிர முன்பு வயிருர சாப்பிட்டுக் கொண்டிருந்தவர்கள் இப்பொழுது அதைவிட அதிகமாக சாப்பிட்டால் அஜீர்ணம் ஏற்பட்டு சாப்பாடு குறையத்தான் சாப்பிட நேரிடும். ஆக, முன்பு அதிகம் சாப்பிட முடியாதிருந்தவர்களுக்கும், சமுதாயத்தில் உள்ள அனைவருக்கும் தான், உணவு, உற்பத்தி செய்பவர்களுக்குத்தான் இந்த உணவு உற்பத்தி அதிகாமகியிருப்பதின் பலன் ஏற்படுகிறது. இதை யாரா லும் மறுக்க முடியாது. பணத்தை வைத்துக் கணக்கு பார்க்கக் கூடாது. உற்பத்திச் செய்யப்படுகிற உணவுப் பொருள்கள் மக்களுக்கு போய் சேரு கிறதா என்றுதான் பார்க்க வேண்டும். அதைத்தான் அடிப்படையாக பார்க்க வேண்டும். பின்னர், துணியை எடுத்துக்கொள்ளுங்கள். முன்பு உற்பத்தியாகிக் கொண்டிருந்ததைவிட, இப்பொழுது துணியில் உற்பத்தி அதிமாகியிருக்கிறது. நான் உயர்ந்த ரக ஸில்கையோ அல்லது வூலனையோ சொல்லவில்லை, சாதாரண துணியைச் சொல்கிறேன். துணி உற்பத்தி அதிகமாகும்போது அதை மக்கள் உபயோகப்படுத்தாமல் அதை வேறு விதமான உபயோகப்படுத்த முடியாது. உற்பத்தியாகும் துணி தேங்கிப் போயிருந்தால் அந்தத் தொழிலே ஸ்தம்பித்துப் போயிருக்கும். இன்று துணி உற்பத்தித் தொழில் மேலும் மேலும் வளர்ச்சியடைந்துகொண்டுதான் தான் போகிறது. ஆகவே, மேலும் மேலும் உற்பத்தியாகும் துணியை மக்கள்தான் வாங்கி உபயோகிக்கிருர்கள். ஆகவே, அதிகப்படியான உற்பத்தியாகும் துணி மக்களிடம் போய் சேரவில்லை என்று சொல்ல முடியாது. கல்வித்துறையை எடுத்துக்கொள்ளுங்கள். முன்பு ஒரு சில பள்ளிக்கூடங்கள், ஒரு சில கல்லூரிகள்தான் இருந்தன. அப்பொழுது யாருக்கு படிக்க அக்கரையிருந்தது, யாருக்கு வாய்ப்பு இருந்தது என்ப தெல்லாம் நமக்கு நன்கு தெரியும். இன்று கிராமங்களில் பல பள்ளிக் கூடங்கள் இருக்கின்றன, பெரிய கிராமங்களில் உயர்நிலைப் பள்ளிகள் இருக்கின்றன. முன்பு பத்து கல்லூரிகள் இருந்ததுபோக இப்பொழுது 58 கல்லூரிகள் இருக்கின்றன. பொது மக்களின் நன்மைக்காகத்தான் இவை பயன்படுகின்றனவா இல்லையா என்று சிந்தித்துப் பார்க்கவேண்டும். இது, பணக்காரர்களுக்காக மட்டும் இருப்பதாகக் கூற முடியாது. பின்னர், வைத்திய வசதியை எடுத்துக் கொள்ளுங்கள். முன்பு எவ்வளவு ஆஸ்பத்திரிகள் இருந்தன? எவ்வளவு டாக்டர் இருந்தார்கள்? அப் பொழுது எந்தளவு வசதி இருந்தது? முன்பு வசதி பெற்றிருந்தவர்க களுக்கு இப்பொழுது புது வசதி வேண்டியதில்லை. வைத்திய வசதி எவ்வளவோ பெருகியிருக்கிறது, இப்பொழுது. ஆகவே, இப்பொழுது

வைத்திய வசதி விரிவடைந்திருக்கிறது என்றால், முன்பு வைத்திய வசதி பெறுதவர்கள், பெற முடியாதவர்கள்தான் இப்பொழுது அந்த வசதிகளைப் பெறுகிறார்கள். அடுத்தபடியாக, சைக்கிள்களை எடுத்துக்கொள்ளலாம். இங்கு மட்டும் 3 லட்சம் சைக்கிள் உற்பத்தியாகிறது, டி.ஐ. சைக்கிள்ஸ்ஸில் அகிலயிந்தியாவை எடுத்துக்கொண்டால் 10 லட்சம், 12 லட்சம் சைக்கிள்கள் உற்பத்தியாகின்றன. ஆக, உற்பத்தியாகும் இந்த 12 லட்சம் சைக்கில்களை மக்கள் வாங்கும்படியான சக்தி மக்களுக்கு ஏற்பட்டிருக்கிறதென்றால் உற்பத்தியின் பலன் மக்களிடம் பரவியிருக்கிறதா இல்லையா என்று பார்க்க வேண்டும். மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்ந்திருக்கிறதா, மக்களின் வாழ்க்கை வசதிகள் பெருகியிருக்கிறதா என்று பொதுப்படையாக கேட்காமல் ஒவ்வொரு துறையையும் எடுத்து அலசிப் பார்த்தால் இந்த பத்து ஆண்டு காலத்தில் நாம் திருப்திப்படாவிட்டாலும்கூட, நம்பிக்கை அளிக்கக் கூடிய முறையிலாவது நாம் முன்னேறிக் கொண்டிருக்கிறோம். அந்தளவு நம் வாழ்க்கை வசதி பெருகியிருக்கிறது என்பதில் சந்தேகமில்லை.

போக்கு வரத்தை எடுத்துக்கொள்ளலாம். பஸ் போக்கு வரத்து யார் கையில் இருக்கிறது என்பது ஒரு புறமிருக்கட்டும். அது பணக்காரர்களுக்கா? ஏழைகளுக்குத்தான் அதனால் புது வசதிகள் ஏற்படுகின்றன. அவர்கள் அதை அனுபவிக்கிறார்கள், இல்லையேல் பஸ் ஓடாது. ஆக, ஒவ்வொரு துறையாக எடுத்துப் பார்க்கும்போது, மக்களின் வாழ்க்கை வசதிகள் ஓரளவாவது அதிகப்பட்டிருக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்ந்திருக்கிறது என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். வாழ்க்கைத் தரம் இந்த அளவு உயர்ந்தால் போதாது, இன்னும் உயர வேண்டுமென்று சொன்னால், அது வேறு விஷயம். அதற்கு என்னென்ன செய்ய வேண்டுமென்று பார்க்கச் சொன்னால், அதை ஒப்புக்கொள்கிறேன். ஆனால், திட்டத்தில் எந்த வித பலனும் ஏற்படவில்லை என்று சொன்னால் அது ஒப்புக்கொள்ளக் கூடிய வாதம் அல்ல. இவ்வளவு நன்மைகள் ஏற்பட்டிருப்பினும் திட்டத்தை நிறைவேற்றுவதில், நிறைவேற்றும்போது, சில குறைகள் ஏற்பட்டிருக்கின்றன என்பதை முன்பே ஒப்புக்கொண்டேன். லோயர் பவானித் திட்டத்தைப் பார்த்தவர்களுக்கு ஒரு உண்மை விளங்கியிருக்கும். இரண்டு லட்சம் ஏக்கர்களுக்குத் தண்ணீர் பாய்ச்சப்படுகிறது. அங்குள்ள ஒரு பெரிய வாய்க்காலில் கசிவுத் தண்ணீர் போவதைப் பார்த்தால், இவ்வளவு தண்ணீர் வீணாகப் போகிறதே என்று நினைக்க வேண்டியிருக்கும். அதன் பிறகும், 2 லட்சத்திற்கு தண்ணீர் பாய்ந்து வெள்ளாமை எடுத்திருக்கிறோம். கசிவுத் தண்ணீரைப் பார்த்துவிட்டு, இந்தத் திட்டத்தினால் ஒரு பலனும் இல்லை என்று சொல்வார்களேயானால், அவர்கள் உண்மையைத் தெரிந்தவர்கள் ஆக மாட்டார்கள். அந்தக் கசிவுத் தண்ணீரைப் போல், திட்டத்தில் ஆங்காங்கு ஒரு சில குற்றங் குறைகள் ஏற்பட்டிருப்பதை ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால் குற்றம் குறைகளை மட்டும் வைத்துக்கொண்டு திட்டமே சரியாக நடக்கவில்லை என்றால் அது சரியான முடிவாக இராது. ஆகவே, இன்று திட்டம் போடுவதில் சில சிக்கல்கள் ஏற்பட்டு, சரியான முறையில் போடாமலிருந்தாலும் கூட, நிறைவேற்றுவதில் பல குறைகள் இருந்தாலும் கூட, திட்டம் போட்டு அதன் அடிப்படையில் தான் நாம் முன்னேற முடியும் என்ற கருத்தை திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்களும் வலியுறுத்தியதை நான் வரவேற்கிறேன், இந்த வாதம்தான் இன்னொன்றுக்கும் பொருந்தும் என்ற காரணத்தால்.

(Deputy Speaker in the Chair.)

இன்று, ஒன்றுபட்ட இந்தியாவாக இருப்பதால் பல சங்கடங்கள் தோன்றுவதைப் பார்க்கிறோம். ஆனால், அந்த சங்கடங்களை அகற்றி, திட்டங்களில் எப்படி குற்றங்கள், குறைகள் இருந்தால் அதை அகற்றிவிட்டு, அவைகளை நன்கு நடத்த முடியுமோ, அப்படியே இந்த சங்கடங்களையும் அகற்றி, நன்றாக நடத்த முடியும் என்ற நம்பிக்கை இருக்கிறது. ஒன்றுபட்ட இந்தியாவாக, அதில் சில சங்கடங்கள், சில சிக்கல்கள் இருந்தாலும் அவைகளை நீக்கிவிட்டு, ஒன்றுபட்ட இந்தியாவாக இருப்பது சரியா அல்லது

[Sri C. Subramaniam] [8th September 1960

பிரித்துக்கொண்டுவருவது சரியா என்று ஆராயக் கடமைப்பட்டிருக்கிறோம். இன்றைய சூழ்நிலையில், இன்றுள்ள தொழில் நுணுக்க அடிப்படையில், இதை ஆராய்ந்து பார்ப்பது மிகவும் அவசியம். முன்போல் அல்லது இன்றிருப்பது. முன்பு ஒரு சிறு நாட்டில் தொழில் நுணுக்கம் ஏற்பட்டதைப் பார்க்கிறோம். அப்படி தொழில் நுணுக்க வளர்ச்சி ஏற்பட்டு, உற்பத்தியைப் பெருக்கினார்கள். அப்படி உற்பத்தி பெருகியபோது நம்மைப் போன்ற பல நாடுகளை, அவர்கள் உற்பத்தி செய்கிற பொருள்களை விற்கும் சந்தைகளாக வைத்துக்கொண்டு, அதற்காகப் பல நாடுகள் தயாரிக்கப்பட்டு வந்தன என்றுதான் சொல்ல வேண்டும். அங்கு உற்பத்தியாகும் பொருள்களை அன்னிய நாடுகளில் விற்பனை செய்வதற்குப் போதுமான சந்தைகள் இருந்தன. ஆரம்ப காலத்தில், தொழில் நுணுக்க வளர்ச்சி ஏற்பட்ட காலத்தில் இது போல் பெருவாரியான அடிப்படையில் இயந்திர அமைப்புகள் ஏற்படவில்லை. முன்பு எடுத்துக்கொண்டால், அமெரிக்காவில் போர்ட் எவ்வளவு கார்கள் தயார் செய்தார்களோ, அது இன்றுள்ளதற்கு நூற்றில் ஒரு பங்குதான் இருக்கும். அவைகளை அமெரிக்காவிலேயே பூராவையும் விற்றுவிடவில்லை. அவைகளை வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து விற்பதற்கு வாய்ப்பு இருந்தது. அப்போது அந்த அளவுக்குப் போதுமானதாக இருந்தது. இன்றைக்கு நூறு மடங்குத் தேவை அதிகரித்து இருக்கிறது. இன்றைக்கு வெளி நாடுகளில் இருக்கின்ற நிலைமையை எடுத்துக்கொண்டால், ஒரு குடும்பத்திற்கு இரண்டு மூன்று கார்கள் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அந்த அளவுக்கு அவர்களுக்கு உள் நாட்டிலேயே மார்க்கெட் (இன்டர்னல் மார்க்கெட்) இருக்கிறது. அந்த அளவுக்கு அவர்களுக்கு மார்க்கெட் இருப்பதால், அவர்களுடைய உற்பத்தி பொருட்கள் வெளி நாடுகளுக்குப் போனாலும் சரி, போகவில்லையானாலும் சரி, அவர்களுக்கு உள் நாட்டிலேயே போதிய அளவு அவர்களுடைய பொருட்களை விற்க முடியும் என்ற உறுதி இருக்கிறது. ஆகையினால் அவர்களைப் போன்று நாமும் தொழில்களை ஏற்படுத்த வேண்டுமென்று சொல்வதற்கில்லை. ∴போர்டு ஸ்தாபனத்தை எடுத்துக்கொண்டால், அவர்கள் ஆரம்பித்த போது ஏதோ 1,000 அல்லது 2,000 மோட்டார்களை தயாரித்துக்கொண்டிருந்தார்கள். அதே நிலைமையில் இப்போது அவர்களுக்கு இருந்துகொண்டிருக்க முடியாது. நாமும் அதே முறையில் பழைய நிலையிலேயே தொழில்களை பழைய இயந்திரங்களைக் கொண்டே ஆரம்பிக்க முடியாது. புதிய இயந்திரங்களை உபயோகித்துத்தான், தொழில் நுணுக்க வளர்ச்சியின் காரணமாக ஏற்பட்டு இருக்கின்ற முன்னேற்றத்தை வைத்துக்கொண்டுதான் தொழில்களை நாம் ஆரம்பிக்க முடியும். பழைய பாணியிலேயே இருக்கின்ற இயந்திரங்களை வைத்துக்கொண்டு நாம் தொழில்களை ஏற்படுத்த முடியாது என்பதையும் நாம் கவனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். ஆகவே, இன்றைக்கு பெரிய தொழில்களை ஆரம்பிக்க வேண்டுமென்று சொல்லுகின்றபொழுது, அதிலும் தமிழ் நாட்டுக்கு மட்டும், அதிலும் குறிப்பாக திராவிட நாட்டுக்கு மட்டும் என்று சொல்லப்படுகிறதே, அந்த அளவுக்கு மட்டும் ஒரு மோட்டார் தொழிலை ஆரம்பிக்க வேண்டுமென்று எடுத்துக்கொண்டால், குறைந்தது பதினாயிரம் கார்களையாவது தயாரித்தால்தான் சாதாரணமாக இந்தத் தொழிலை நாம் நடத்திக்கொண்டிருக்க முடியும். அதே சமயத்தில் இந்த பத்தாயிரம் கார்களும் நம் நாட்டிற்குள்ளேயே விற்க முடியுமா என்பதையும் வெளி நாடுகளுக்கு அனுப்ப முடியுமா என்பதையும், அதிலும் நாம் பிரிந்து போக வேண்டும் என்று சொல்லுகிற இந்த நேரத்தில், எந்த அளவுக்கு நம்முடைய உற்பத்திப் பொருட்களை செலவு செய்ய முடியும் என்பதைப் பார்த்துத்தான் இப்படிப்பட்ட தொழிலை அமைக்க ஏற்பாடு செய்ய வேண்டியதாய் இருக்கிறது. இதிலும் நம்மைப் போன்ற பிற்போக்கு அடைந்திருக்கின்ற சிறிய சிறிய நாடுகள் எல்லாம் தொழில் வளர்ச்சியில் முன்னுக்கு வர வேண்டுமென்று முயற்சித்துக்கொண்டு வருகிறது. ஆகவே, 50 வருஷங்களுக்கு அல்லது 100 வருஷங்களுக்கு முன்னால் நம்மைப் போன்று இருந்த நாடுகள் இப்போது எப்படி இருக்கிறது என்பதை வைத்துக்கொண்டு நாம் கணக்குப் போட முடியாது. அதிலும் எல்லா நாடுகளும் தங்கள் நாட்டிலேயே எல்லா சாமான்களையும் உற்பத்தி செய்து முன்னுக்கு வரவேண்டுமென்ற எண்ணத்துடன்

தொழில்களை எல்லாம் பெருக்கிக்கொண்டு வருகின்ற பொழுது தாங்கள் உள் நாட்டிலேயே உற்பத்தி செய்கின்ற பொருட்களை வாங்குவதற்குரிய சக்தி தங்கள் நாட்டிலேயே இருக்கிறதா என்று பார்க்கின்ற அடிப்படையில் தான் இன்றைக்குப் பெரும் தொழில்களை ஆரம்பிக்க வேண்டியிருக்கிறது. இன்றைக்கு நாம் "ஸ்டாண்டர்ட்" மோட்டார் தொழிற்சாலையை ஆரம்பித்திருக்கிறோம். இன்னொரு மோட்டார் தொழிற்சாலையையும் ஏற்படுத்தி இருக்கிறோம். இரண்டு தொழிற்சாலைகளிலிருந்தும் உற்பத்தி செய்யக்கூடிய கார்களை நம் நாட்டிலேயே விற்க முடியும் என்ற அடிப்படையில்தான் இந்த இரண்டு தொழிற்சாலைகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன. அதே மாதிரிதான் மோட்டார் தொழிற்சாலையாக இருந்தாலும் சரி, லாரி தொழிற்சாலையாக இருந்தாலும் சரி, நமது நாட்டில் இருக்கின்ற தேவைகளை உணர்ந்துதான் இப்போது தொழிற்சாலைகளை அமைக்க முடியும். இன்றைக்கு அசோக் லே லண்ட் கம்பெனியையும் அந்த முறையில்தான் அமைத்திருக்கிறோம். இந்தியா முழுவதிற்கும் எவ்வளவு விற்க முடியும் என்பதைப் பார்த்துத்தான் இதில் நாம் உற்பத்தி செய்ய முடிகிறது. சைக்கிள் தொழிற்சாலையை எடுத்துக்கொண்டாலும், இன்றைக்கு மூன்று லட்சம் சைக்கிள்களை இப்போது இருக்கக்கூடிய சைக்கிள் தொழிற்சாலைகள் உற்பத்தி செய்கின்றன. இதிலும், நமது தேவையைப் பொறுத்துத் தான் உற்பத்தி செய்ய முடிகிறது. ஆகவே, இன்றைக்கு மற்ற காரியங்கள் எல்லாம் எவ்விதம் இருந்தபோதிலும் ஒரு பெரும் தொழிற்சாலையை ஆரம்பிக்க வேண்டுமென்றால், நான் முன்னால் சொல்லியவற்றை எல்லாம் அடிப்படையாக வைத்துக்கொண்டுதான் நாம் திட்டங்களைப் போட வேண்டிய நிலைமையில் இருக்கிறோம். அதிலும் நம்மைப் போன்று பிற்போக்கான நிலையிலிருந்து இப்போது முன்னேறிக்கொண்டிருக்கும் நாடுகள் எல்லாம் உள் நாட்டு மார்க்கெட்டை நம்பித்தான் தொழில்களைப் பெரும்பாலும் ஆரம்பிக்க வேண்டிய நிலையில் இருக்கின்றன. அதிலும் பிற்போக்கான பகுதிகளுக்கு வலியுறுத்தக்கூடிய அம்சமாக பல நிபுணர்களும் ஆராய்ந்து சொல்லியிருப்பது, பிற்போக்கான நாடாக இருந்து, அதன் பின்னால் எந்த அளவுக்கு முன்னேறியிருக்கிறதோ, அந்த அளவுக்குத்தான் உற்பத்தியை அந்த நாடு பெருக்க முடியுமே தவிர, பெரிய அளவுக்குப் பெருக்க முடியாது என்று சொல்லுகிறார்கள். இன்றைக்கு இருக்கக்கூடிய நிலையில் மற்ற பகுதிகள் எல்லாம் வெளி நாடுகளில் எல்லாம் ஏற்படக் கூடிய முன்னேற்றத்திற்குத் தகுந்தவாறு போட்டி போடக்கூடிய வகையில் நம் நாட்டில் தொழில்களை அமைக்கலாம் என்று சொன்னால், இன்றைக்கு நமக்கு அந்த வசதி கிடையாது. ஒரு வேளை 30, 40 வருஷங்களுக்குப் பின்னால் அவர்களையும் மீறக் கூடிய வகையில் அவர்களுடைய தொழில் நுணுக்கங்களுக்கெல்லாம் மேலாக போட்டி போடக் கூடிய வகையில் தொழில்களை ஏற்படுத்த முடியுமோ என்னவோ தெரியவில்லை. ஆனால், இப்போதுள்ள நிலைமையில் அது முடியாத காரியம்.

**Sri C. N. ANNADURAI** : உள் நாட்டு மார்க்கெட்டு இருந்தால் ஒழிய சிறிய நாடுகள் தனித்து வாழ முடியாது என்ற வாதத்தை அமைச்சர் அவர்கள் சொல்லுகிறார்கள் என்று நினைக்கிறேன். இத்தாலிய நாடு சிறிய நாடுதான், அது உள் நாட்டு மார்க்கெட்டை மட்டும் நம்பியிருக்கவில்லை. செக்கோஸ்லேவியா நாட்டை எடுத்துக்கொண்டால் அவர்களும் அதே நிலையில்தான் இருந்துகொண்டிருக்கிறார்கள். அந்த நாட்டிலுள்ள மெஷின்களெல்லாம் நம் நாட்டுக்கு வருகின்றன. அதே போன்று நாமும் உற்பத்திப் பொருட்களை அதிகரித்த பின்னால் வேண்டிய அளவுக்கு எக்ஸ்போர்ட் மார்க்கெட்டுகளைத் தேடிக்கொள்ளலாம்.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : அவ்வித எக்ஸ்போர்ட் மார்க்கெட்டுகளை நாம் எவ்விதம் கண்டுபிடிப்பது ? ஒன்று நாம் உற்பத்தி செய்யக்கூடிய பொருட்களை அவர்கள் உற்பத்தி செய்யாமல் இருக்க வேண்டும், அல்லது நாம் உற்பத்தி செய்கின்ற பொருட்கள் தரம் உயர்ந்ததாக இருக்க வேண்டும். ஆகவே, எக்ஸ்போர்ட் மார்க்கெட் கிடைப்பது என்பது எப்போதும் ஒரே மாதிரியாக இராது. அதிலும் மற்ற நாடுகள்

[Sri C. Subramaniam] [8th September 1960

எல்லாம் நம்மைப் போன்றே முன்னேறிக்கொண்டிருக்கின்ற சமயத்தில் நாம் எந்த நாடுகளுக்கு அனுப்ப முடியும்? இன்றைய நிலையில் நமது பொருட்களை ஜெர்மனிக்கு அனுப்ப முடியுமா? முடியாது. இன்றைக்கு நம் அண்டையிலுள்ள சில நாடுகளுக்கு அனுப்பிக்கொண்டிருக்கிறோம் என்றால் அதே பொருட்களை அவர்களும் உற்பத்தி செய்ய ஆரம்பித்து விட்டால் அந்த நாடுகளுக்கும் அனுப்ப முடியாது. நம் நாட்டைப் பொறுத்தவரையில் பல பொருட்களை வெளி நாடுகளிலிருந்து வாங்கி யாக வேண்டும். ஆகவேதான் இன்றைக்கு பிற்போக்காக இருக்கக்கூடிய நாடுகளில் எல்லாம் வாங்கக்கூடிய சக்தி உள் நாட்டில் குறைவாக இருந்து கொண்டிருக்கிறது. ஆனால், நூறு வருடங்களுக்குப் பின்னால், இன் றைக்கு முன்னேறியிருக்கக்கூடிய நாடுகளில் எல்லாம் வாங்கக்கூடிய சக்தி பெருகி அதற்கேற்ப தொழிற்சாலைகளையும் அமைக்கக் கூடிய ஆற்றல் ஏற்பட்டிருக்கிறது. அது வேறு விஷயம். இன்றைக்கு இருக்கக்கூடிய சூழ்நிலையில், இத்தாலி, சுவச்சர்லாண்ட் போன்ற நாடுகள் எந்த அளவில் ஏற்றுமதி செய்யக்கூடிய நிலையை அடைந்திருக்கிறது என்பதையும் நாம் பார்க்கவேண்டும்.

Sri C. N. ANNADURAI : இந்த நாட்டிலிருந்து உற்பத்தியாகக்கூடிய பொருட்களை வெளி நாடுகளுக்கு அனுப்புவதற்கு 50 வருடங்கள், 60 வருடங்கள் பொறுத்திருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. பத்து ஆண்டுகளுக்குள்ளாகவே நமது உற்பத்தியை அதிகரித்து வெளி நாடுகளுக்கு அனுப்பலாம். நாம் தயார் செய்கின்ற மோட்டார்களை அனுப்பலாம், இரும்புத் தொழிற்சாலைகளை எல்லாம் பெருக்கிய பிறகு எஃகுகளை வெளிநாட்டுக்கு அனுப்பலாம், சர்க்கரைத் தொழிலைப் பெருக்கி சர்க்கரையை அனுப்பலாம். இப்போது கூட லெய்து தொழிலுக்கு வேண்டிய பொருட்கள் நம் நாட்டிலிருந்து வெளி நாடுகளுக்குப் போய்க்கொண்டு இருக்கிறது.

The Hon. Sri C. SUBRAMANIAM : ஆனால் அவைகள் எந்த அளவு போகிறது என்பதையும் நாம் பார்க்க வேண்டும். நாம் உற்பத்தி செய்வதில் ஒரு சதமானம், அல்லது இரண்டு சதமானம் தான் பக்கத்திலுள்ள நாடுகளுக்குப் போகின்றன. அவர்களும் நம்மைப் போன்று இந்தப் பொருட்களை எல்லாம் பெருக்குவதற்கு முயற்சித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் ஜெர்மனி, அமெரிக்கா போன்ற நாடுகளுக்கு நாம் உற்பத்தி செய்கின்ற பொருட்களை அனுப்ப முடியாது. வேண்டுமென்றால் கைத்தறித் துணிகள் அவர்களுக்குப் புதிதாக இருக்கலாம். இப்படிப்பட்ட நூதனப் பொருட்களை அனுப்பலாமேத் தவிர, நம்முடைய ஸ்டான்டர்ட் கார்களை அனுப்பினால் அவர்கள் திரும்பிக்கூடப் பார்க்கமாட்டார்கள். நம்முடைய காரைப் பார்த்து சிகரேட் கேஸ் மாதிரி தான் இருக்கிறது என்று சொல்லுவார்கள். ஆகவேதான், . இதையெல்லாம் அடிப்படையாக வைத்துக்கொண்டுப் பார்க்க வேண்டுமே தவிர, ஒரு சில சாமான்கள் அனுப்புவதை பார்க்கக் கூடாது. அப்படி பார்ப்போமேயானால் மிகவும் குறைந்த அளவுதான் வெளி நாடுகளுக்குப் போய்க்கொண்டிருக்கிறது. அதே சமயத்தில் அண்டையில் நம்மைப்போன்ற பிற்போக்கான நிலையிலிருந்த நாடுகளும் உற்பத்தியை பெருக்குவதில் முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். அது வெற்றி பெறும் என்பதிலும் சந்தேகமில்லை.

இரண்டாவது அம்சமாக நாம் பார்க்க வேண்டியது இன்றைக்கு, நான் முன்பு குறிப்பிட்டது போல் வெளிநாட்டாருடைய உதவியை அல்லது இன்னொரு நாட்டினுடைய உதவியை பெற்றுத்தான் நம்முடைய தொழில்களை அமைக்க முடியும் என்பதில் சந்தேகமில்லை. அதில்லாமல் 50, 60 வருடங்கள் கழிந்து மற்றவர்களைப் போல் தலை முறையாக பாடுபட்டு முன்னேறினால் போதும் என்றால் இது தேவையில்லை. ஆனால் உடனடியாக பத்து ஆண்டுகளுக்குள்ளில் அல்லது 20 ஆண்டுகளுக்குள்ளில் நாம் பெரிய அளவில் முன்னேற வேண்டும் என்றால் நாம் நமக்கு வேண்டிய இயந்திரங்களை எல்லாம் நாமே உற்பத்தி செய்வது என்பது

8th September 1960] [Sri C. Subramaniam]

முடியாதகாரியம். ஆகவேதான் தொழிற்துறையாக இருந்தாலும் சரி, மற்ற துறைகளாக இருந்தாலும் சரி, அன்னிய நாட்டு உதவி நமக்கு அவசியம் என்பதை நாம் உணர்ந்து கொள்ள முடியும். ஆனால் இவைகளை எங்கே இருந்து வாங்குவது என்கின்ற விஷயத்தில், சில அபிப்பிராயங்கள் இருக்கலாம், திரு. கல்யாண சுந்தரம் அவர்கள் வேண்டுமானால் சோவியத் ரஷ்யாவிலிருந்து வாங்கலாம் என்று சொல்லுவார்கள், இன்னொருவர் அமெரிக்காவிலிருந்து வாங்கலாம் என்று சொல்லுவார்................ (ஸ்ரீ எம். கல்யாணசுந்தரம் : அமெரிக்காவிடமிருந்து வாங்க வேண்டாம் என்று நான் சொல்லவில்லையே, இல்லாதவனுக்கு யார் கொடுத்தால் என்ன ?) ஆம், இல்லாதவனுக்கு எப்போது யார் கொடுப்பார்கள் என்பதையும் நாம் பார்க்க வேண்டியவர்களாக இருக்கிறோம்.

அப்படிப் பார்க்கும் போது இன்றைக்கு அந்நிய நாட்டு உதவிபெற வேண்டுமென்று சொன்னால் அதற்குப் பெரிய நாடாக இருந்தால்தான் அந்நிய நாட்டு உதவி கிடைக்குமே தவிர, சிறு சிறு நாடுகளாகப் பிரிந்து போய்விட்டால் சுலபமாக அந்நிய நாட்டு உதவி கிடைக்காது. சிறு நாடாகப் பிரிந்துவிட்டால் அதற்குப் பொருளாதார பலம் இல்லை ; மனித பலம் இல்லை ; வேறு பலமும் இல்லை. இன்றைக்கு நாம் பெரிய நாடாக இருக்கின்ற காரணத்தினால்தான் அந்நிய நாட்டு இயந்திரங்கள் நெய்வேலியில் குவிந்து கிடக்கின்றன. இன்றைக்கு குந்தாவில் மின்சார உற்பத்தி நிலையத்தை இந்த அளவுக்கு ஏற்படுத்த முடிகிறது. நாம் அந்நிய நாட்டு உதவியைப் பெற அடிப்படையாக இருப்பது 40 கோடி மக்களைக் கொண்ட ஒரு மாபெரும் சமுதாயமாக இருக்கும் காரணத்தினால்தான் என்பதைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். இன்றைக்குச் சைனாவுக்கும் ரஷ்யாவுக்கும் போட்டி ஏற்படும்போது, எவ்வளவுதான் ரஷ்யா முன்னணியில் இருந்த போதிலும் கூட சைனா 60 கோடி மக்களைக் கொண்டுள்ள காரணத்தால் அதுதான் பெரிய பலம் பொருந்திய நாடாகக் கருதப்படுகிறது. அதே போல் நம்மிடம் 40 கோடி மக்களின் மனித பலம் இருப்பதால் உலகத்தின் வெவ்வேறு பகுதிகளில் இருந்தும் உதவிகள் கிடைக்கின்றன. ஆகவேதான் இன்றைக்கு நான் திராவிட முன்னேற்றக் கழகத்தலைவர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்—எப்படித் திட்டத்தில் தப்பு ஏற்பட்டால் தப்பைத் திருத்திக் கொள்ள வேண்டுமென்ற வாதத்தை அவர்கள் சொன்னார்களோ, அதே போல் இன்றைக்கு ஒன்றாக இயங்குவதில் தவறுகள் இருந்தால், தடங்கல்கள் இருந்தால் நீக்கிக் கொள்ள முயற்சி செய்ய வேண்டுமேயொழிய அதற்காகப் பிரிந்து போய் விடவேண்டுமென்று சொல்வது சரியல்ல. திட்டத்தில் தப்பு இருப்பதால் திட்டமே வேண்டாமென்று சொல்வது எப்படி சரியில்லையோ அதே போல் இப்படி ஒன்றாக இருப்பதால் சில சங்கடங்கள் ஏற்பட்டாலும் கூட இந்தச் சங்கடங்களை நிவர்த்தி செய்து கொள்ள முடியும் என்ற நம்பிக்கை இருக்குமானால் மற்றவர்களுக்கு வக்காலத்து வாங்கி . . . .

SRI C. N. ANNADURAI : ஏற்படக்கூடிய சங்கடங்களைத் தீர்த்துக் கொள்ள முடியும், சங்கடங்கள் ஏற்பட்டால் சமாளித்துக்கொள்ள முடியும் என்ற நம்பிக்கை இருப்பதால்தான் திராவிட நாடு தனியாக வேண்டும் என்று நாங்கள் சொல்கிறோம்.

THE HON. SRI C. SUBRAMANIAM : நம்பிக்கை இருந்தால் இருப்பதை என் வீணாகப் பிரிக்க வேண்டும் ? (ஆரவாரம்) புதிதாக அப்படிப் பிரித்து அமைக்க வேண்டுமென்று சொன்னால் அதற்குக் காரணம் என்ன ? இந்தச் சட்டசபையை இரண்டாகப் பிரிக்க வேண்டுமென்று சொல்வதாக வைத்துக்கொண்டால், அவ்வாறு பிரிப்பதற்கான காரணத்தைச் சொல்ல வேண்டும். இதுதான் எனக்கு இஷ்டமாக இருக்கிறது என்று சொன்னால் அதை யாரும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். சங்கடங்களைத் தீர்த்துக்கொள்ள முடியும் என்ற நம்பிக்கை இருக்குமானால் . . . .

SRI C. N. ANNADURAI : அப்படியானால் ஒன்றுபட்டிருக்கவும் காரணம் இல்லை. காரணமில்லாமல் ஒன்றுபடுத்தி இருப்பதால் தனியாக போகவேண்டுமென்று சொல்கிறோம்.

[8th September 1960

THE HON. SRI C. SUBRAMANIAM : காரணம் முன்னால் பிரிந்திருந்த காரணத்தால் அடிமைப்பட்டோம். ஒன்றுபட்டதினால் நாம் சுதந்திரம் அடைந்தோம் என்பதில் சந்தேகம் கிடையாது. (ஆரவாரம்) மறுபடியும் பிரிந்து போய் அடிமைப்பட வேண்டுமென்றால் அந்தப் பரீட்சையைச் செய்து பார்க்கலாம். அதற்கு உண்மையில் மக்கள் ஒத்துக் கொள்வார்களா ? சங்கடங்கள் என்று சொல்லும்போது அவை நிவர்த்திக்கக் கூடிய சங்கடங்கள்தான். "நீங்கள் ஒத்துக் கொள்ளவில்லையென்றால் நாங்கள் பிரிந்து போய்விடுவோம்" என்று கூற வேண்டுமென்று சொல்கிறார்கள். அப்படிச் சொன்னால் எப்போது மதிப்பு இருக்கும் ? கணவனும் மனைவியும் இல்லற வாழ்க்கை நடத்துகிறார்கள். ஒன்றாக இருக்கும்போது ஏதோ காரணத்தினால் "உன்னை விட்டுப் பிரிந்து போய் விடுவேன்" என்று சொன்னால் அதில் அர்த்தமிருக்கிறது. "டைவர்ஸ்" கோர்ட்டில் போய்ப் "பெட்டிஷன்" போட்ட பிறகு "உன்னைவிட்டுப் பிரிந்து போய் விடுவேன்" என்று சொன்னால் என்ன அர்த்தம் ? ஆகையால் இன்றைக்கு பிரிந்து போய்விடுவோம் என்ற மிரட்டலுக்கு மதிப்பு இருக்க வேண்டுமென்றால் நீங்கள் பிரிவினைக் கொள்கையைக் கை விட்டால் தான் மதிப்பு இருக்குமே யொழிய, அதைக் கொள்கையாக வைத்துக் கொண்டிருக்கும் வரையில் அதற்கு மதிப்பு இருக்காது. ஆகவே, அதற்குப் புதிய பலம் கொடுக்க வேண்டுமென்று சொன்னால், இந்தப் பிரிவினைக் கொள்கையை விட்டால் தான் நீங்கள் புதிய சக்தியைக் கொடுத்தவர்களாவீர்கள். அதை வைத்துக் கொண்டிருக்கும் வரையில் பலஹீனத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கிறீர்களே தவிர, பலத்தை கொடுக்கவில்லை.

SRI C. N. ANNADURAI : அமைச்சர் அவர்களுடைய வாதம் மிகத் தவறான வாதமாக இருக்கிறது. பிரிவினைக் கொள்கையை விட்டு விட்டு பிரிவினை உணர்ச்சியைத் தெரிவிப்பது எந்த வகையான வாதம், அது எந்த வகையிலே பொருந்தும் என்று விளங்கவில்லை. அதை அமைச்சர் அவர்கள் விளக்குவாரா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதற்கு மேல் விளங்க வைக்கக்கூடிய சக்தி எனக்கு இல்லை. சில பேராவது இதைப் புரிந்து கொண்டிருப்பார்கள் என்று நம்புகிறேன். ஆகையினால்தான் இன்றைக்கு நாம் இதை யோசித்துப் பார்க்கக் கடமைப்பட்டிருக்கிறோம். இன்னொன்றையும் நான் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். இன்றைக்கு நாட்டிலே, மொழி அடிப்படையில் இருந்தாலும் சரி, பிரிவினை அடிப்படையிலே இருந்தாலும் சரி, வேறு முரண்பட்ட அடிப்படையிலே இருந்தாலும் சரி, கிளர்ச்சி, குழப்பம் அடிப்படையிலே இருக்குமானால் இன்றைக்கு நாம் எவ்வளவுதான் திட்டங்களைப் போட்டாலும் அதை நிறைவேற்றுவது என்பது முடியாத காரியம். இன்றைக்கு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை நாம் இவ்வளவு நல்ல முறையில் நிறைவேற்ற முடிந்தது என்று சொன்னால் அதற்குக் காரணம் மக்கள் அமைதியான முறையில் இருந்து ஒத்துழைத்தார்கள் என்பதுதான். அதற்குப் பதிலாக நாட்டிலே எதற்கெடுத்தாலும் கிளர்ச்சி, பெயர் மாற்றக் கிளர்ச்சி, பிரிவினைக் கிளர்ச்சி, மொழி பற்றிய கிளர்ச்சி என்று ஏற்பட்டுக் கொண்டிருந்தால் கிளர்ச்சிக்கு முதலிடம் கொடுத்து விட்டு இதையெல்லாம் தள்ளிப் போட வேண்டியதாக ஏற்பட்டு விடும். இதன் காரணமாகத்தான் ஒன்று பட்ட இந்தியாவாக இருக்க வேண்டும் ; அந்த ஒன்றுபட்ட இந்தியாவில் போடப்படுகின்ற திட்டங்களிலே உள்ள குறைகளை, சங்கடங்களைப் போக்கிக் கொள்ளக்கூடிய சக்தி, தன்னம்பிக்கை இருக்கிறது. அதனால் நம்முடைய உரிமைகள் எதுவும் பாதிக்கப்பட மாட்டாது ; ஒன்றாக இருக்கிற காரணத்தால் அவர்கள் சொன்னதையெல்லாம் கேட்டுக் கொண்டிருக்க வேண்டுமென்ற அடிப்படையில் அல்ல என்பதை நான் வலியுறுத்திச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இன்னொரு விஷயத்தையும் நாம் மனதிலே கொள்ள வேண்டும். இன்றைக்கு வெகு சுலபமாக ரஷ்யாவில் இருப்பதை எடுத்துச் சொல்கிறார்கள். அமெரிக்காவிலே இருப்பதை எடுத்துச் சொல்கிறார்கள் அந்த நாடுகள் இன்றைக்குப் பொருளாதாரத் துறையிலே முன்னேற்றமடைந்

8th September 1960] [Sri C. Subramaniam]

துள்ள நாடுகள். அப்படியிருந்தும் கூட அங்கு ஜனத்தொகை எப்படியிருக்கிறது என்றால்—சோவியத் ரஷ்யாவின் பரப்பளவு 84.73 லட்சம் சதுர மைல்கள். அதன் ஜனத் தொகை 21 கோடி 45 லட்சம். சதுர மைலுக்கு எவ்வளவு பேர் என்று கணக்குப் பார்த்தால் 25 பேர்தான் வருகிறது.

SRI M. KALYANASUNDARAMff A good part of it is Siberia

. . . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : which is rich in minerals. It is the greatest asset to Russia.

யு. எஸ். ஏ.-வை எடுத்துக் கொண்டால் பரப்பளவு 30.22 லட்சம் சதுர மைல். ஜனத் தொகை 16 கோடி 43 லட்சம். சராசரியாக சதுர மைலுக்கு 50 பேர் வருகிறது. ஆகையால் நில வளம், இயற்கை வளம் நம்முடைய நாட்டில் இருக்கும் அளவுதான் அங்கேயும் இருக்கிறது. ஆனால் இங்கே ஜனத் தொகை அதிகம். இந்தியாவில் சராசரி சதுர மைலுக்கு 304 பேர்கள் இருக்கிறார்கள். தமிழ் நாட்டில் 600 பேர், கேரளாவில் 1,200 பேர். ஆகையினால் இன்றைக்கு நமக்கு மக்கள் பளுவும் சாதகமாக இருப்பதற்குப் பதிலாக, பிற்போக்கான சமுதாயமாக இருக்கின்ற காரணத்தால் பாரமாக இருக்கிறது என்பதைக் கவனிக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். ஆகையினால் ரஷ்யாவைப் பார்த்தோ, அமெரிக்காவைப் பார்த்தோ திட்டங்களை நம் நாட்டில் நிறைவேற்ற முடியாது. நம்முடைய நாட்டில் இருக்கக் கூடிய பல்வேறு பிரச்னைகளையும், பல்வேறு சூழ்நிலைகளையும் மனதிலே வைத்துக் கொண்டுதான் திட்டங்களை வகுக்க வேண்டியிருக்கிறது. இன்றைக்குத் திட்டம் போட்டு வேலை செய்ய வேண்டுமென்று சொல்லும்போது இது வரை திட்டம் போட்டு முன்னேற்றம் எங்கு ஏற்பட்டிருக்கிறது என்று சொன்னால் அது கம்யூனிஸ்ட் நாடுகளிலேதான். மற்றவர்களுக்கெல்லாம் அவகாசம் இருந்தது. பத்துப் பதினைந்து தலை முறைகளாகப் பாடுபட்டு முன்னுக்கு வந்தார்கள். நாம் இன்றைக்கு பெரும் அளவு கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கலாம். இதற்காக பத்துப் பதினைந்து தலைமுறைக்குக் காத்துக் கொண்டிருக்க வேண்டுமென்று சொல்ல முடியாது. 12-30 p.m.

அது அறிவு பரவலாக இல்லாத காலத்தில், தலை விதியே என்று ஒப்புக்கொண்டிருந்த காலத்தில் பத்துத் தலைமுறைகள் வேண்டுமென்றாலும் பொறுத்திருக்கலாம் என்று சொல்லலாம். ஆனால் இன்று அதுமாதிரி இல்லை. ஆகவே, வேகமாகச் செய்யக் கடமைப்பட்டிருக்கிறோம்.

அந்த அனுபவத்தை வைத்துக் கொண்டு, கம்யூனிஸ்டு நாடுகளில் இருக்கும் அனுபவத்தை வைத்துக் கொண்டு, நாம் ஜனநாயக அடிப்படையில் திட்டம் வகுக்கவேண்டியதாக இருக்கிறது. ஜனநாயக அடிப்படையில் நாம் இதை நிறைவேற்ற வேண்டியவர்களாக இருக்கிறோம். ஆகையால் தான், இந்த அடிப்படைக்கு ஒரு புதிய தத்துவம் வேண்டுமென்று சொன்னோம். அதற்காகத்தான் சொன்னேன். கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்தரம் அவர்களுக்கு—கம்யூனிஸ்டுக் கட்சிகாரர்களுக்கு—கம்யூனிஸ்டுத் தத்துவம் ஒன்றுதான் தத்துவமே தவிர, மற்றவை தத்துவமே அல்ல ; மற்றவைகளெல்லாம் தத்துவம் என்று சொன்னாலே, "போலிகள் அவைகளைப் போய் தத்துவம் என்று காட்டிக்கொண்டிருக்கிறார்களே" என்று சொல்லக்கூடிய அவ்வளவு ஆழ்ந்த நம்பிக்கை உள்ளவர்கள் கம்யூனிஸ்டு தத்துவத்திலே, மார்க்சீய தத்துவத்திலே.

மத வெறியின் காரணமாக தங்களுடைய மதம்தான் உண்மையான மதம், மற்றவைகளெல்லாம் ஆண்டவனிடத்திலே எடுத்துச் செல்வது அல்ல, வேறு எங்கோ சைத்தானிடத்திலே எடுத்துச் செல்லக்கூடியவை என்று சொல்கிற மாதிரி கம்யூனிஸ்டுகளுக்கு இந்த லட்சிய வெறியானது எப்படி ஏறியிருக்கிறது என்றால், தங்களுடைய தத்துவம்தான், தங்களுடைய லட்சியம் தான் உண்மையான தத்துவமாகவும், உண்மையான லட்சியமாகவும் இருக்குமே தவிர, மற்றவைகளை, "தத்துவமே

அல்ல, லட்சியங்களே அல்ல, மக்களைப் பாழ்படுத்தக்கூடியவை, மக்களை அடிமைப்படுத்தக்கூடியவை" என்று சொல்லக்கூடிய அளவுக்கு இருக்கிறது. உண்மையான மத வெறி பிடித்தவர்களைப் போல கம்யூனிஸ்டுகளும், அவர்களுடைய தத்துவத்திற்குமேல் வேறு ஒன்றுமே இல்லை என்ற வகையில் கூறுகிறார்கள். ஆனால், அந்த உண்மையை ஏற்றுக் கொள்ள முடியுமா, என்ன? அதைப்போல், ஏதாவது தத்துவ ரீதியாக வகுத்துச் செய்வதைப் பார்த்து, "தத்துவப்படிக் கொண்டுவருவதாக இதை எப்படிச் சொல்லலாம்? காரணம், ஒரு எழுத்து இருக்கிறதா இதைப் பற்றி எங்களுடைய மார்க்ஸீய தத்துவத்திலே? மார்க்ஸீயத்திலே இல்லையென்றால் அது தத்துவமாக இருக்க முடியாது" என்ற வகையில் புது விஷயத்தைச் சொல்லி இதற்குத் தத்துவ ரீதியாக உருக் கொடுக்கப்பார்க்கின்றார். "இது எப்படி வர முடியும்? எங்கள் வேதத்திற்கு ஒத்துவரவில்லையே" என்று நினைப்பது இயற்கைதான்.

இருந்தாலும், திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்கள், அந்தத் திராவிட நாட்டுக் கொள்கையைக் கூட ஒரு புறம் ஒதுக்கி வைத்துவிட்டு, 'இந்தக் கொள்கை சரியா என்று யோசித்துப் பார்க்க வேண்டியது' என்றுதான் ஒப்புக் கொண்டாரே தவிர, . . . . .

SRI C. N. ANNADURAI : இதற்கும் அதற்கும் சம்பந்தம் இல்லை.

THE HON. SRI C. SUBRAMANIAM : சம்பந்தம் இல்லாவிட்டால் போகிறது. இன்றைக்கு ஜனநாயக அடிப்படையிலே திட்டத்தை வகுத்து, ஜனநாயக அடிப்படையிலே நிறைவேற்ற வேண்டுமென்று சொல்லும்போது, அதற்கான புது சூழ்நிலை, புது அமைப்புக்களை நாம் வகுத்துக் கொள்ளக் கடமைபட்டிருக்கிறோம். அவ்வாறு வகுத்துக் கொள்ளவில்லை யென்றால் திட்டத்தை நிறைவேற்ற முடியாது. அதற்கான புதிய அறிவு, புதிய அனுபவம், புதிய ஆற்றல் இவையெல்லாம் வேண்டியதாக இருக்கிறது. அதற்காக ஒருவர் சொல்வதை, திட்டமாக அல்லது கொள்கையாக, அல்லது வேதமாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பது அல்ல. இதைப்போன்று விவாதிப்பதன் மூலமாக பல்வேறு கருத்துக் கொண்டவர்கள், பல்வேறு நோக்குக் கொண்டவர்கள், அவரவர்கள் சொல்லக் கூடியதையெல்லாம் வகுத்து, இணைத்து ஒரு புதிய பாதையை அமைப்பதற்கு நாம் முயற்சி செய்வதற்குக் கடமைப்பட்டிருக்கிறோம். இன்றைக்கு திராவிட நாட்டுக் கொள்கையை வலியுறுத்துகிறவர்கள் எப்படி நாம் திராவிட நாடு இல்லாமலேயே லட்சியங்களை நிறைவேற்றிக் கொள்ள முடியும் என்று யோசிக்க, சிந்தனையைத் தூண்ட அதுவும் கூட உதவுகிறது. இன்றைக்கு ஒரு எதிர்க் கொள்கை கூடாது என்று சொல்லவில்லை. ஆனால், அதையே விடாப்பிடியாக, எத்தனை வருஷங்களானாலும், இதுதான் எங்களுடைய கொள்கை என்று வகுத்துக் கொள்ளக் கூடாது என்று நான் கேட்டுக் கொள்ளுகின்றேன். நான் முன்பே அவரைக் கேட்டுக் கொண்டேன், 'பத்து வருஷங்களுக்கு ஒத்திப் போடுங்கள்' என்று. ஆனால் இன்றைக்கு நான் கேட்டுக் கொள்வது 'திராவிட நாடு வேண்டும் என்று இன்னும் பத்து வருஷங்கள் பேசிக் கொண்டிருந்துவிட்டு, அதற்குப் பிறகு பேசுவதை விட்டுவிடுவோம்' என்று வாய்தா போட்டுவிடுங்கள் என்று கேட்டுக்கொள்ளுகின்றேன்.

அதற்கடுத்தபடியாக, தொழிற் துறை முன்னேற்றத்திலே இன்றைக்கு தனியார் துறை, பொதுத் துறை என்பதைப்பற்றி முன்பு கனம் திரு. அண்ணாதுரை அவர்கள் வெகு அழகாகச் சொன்னார்கள். அர்த்தனாரீஸ்வரக் கொள்கையை இந்தச் சமயத்திலும் எதிர்த்துப் பேசினார்கள். இதற்கு முன்பு சொன்ன பதிலையே இப்பொழுதும் சொல்வதாக இல்லை. இன்றைக்கு நாம் யோசித்துப் பார்க்க வேண்டியிருக்கிறது. அதற்காகத் தான் நான் மத்தியிலே குறுக்கிட்டுச் சொன்னேன். தொழில்களே இல்லாமல் போவதைவிட, தொழில் ஏற்பட்டால் பொதுத் துறையில்தான் ஏற்பட வேண்டும் என்று பார்த்துக் கொண்டிருக்காமல் தனியார் துறையில் ஏற்பட்டாலும் பரவாயில்லை, என்று ஏற்றுக் கொள்வதாகச் சொன்னேன்.

8th September 1960] [Sri C. Subramaniam]

எல்லாத் தொழில்களையும் சர்க்காரே எடுத்து நடத்தக்கூடிய அமைப்பு இன்றைக்கு இருக்கிறதா என்று பார்க்கவேண்டும். ரஷ்யாவைப்போல் ஒரு பெரிய புரட்சி நடந்து, அம்மாதிரி ஏற்படவேண்டுமென்றால் அது வேறு விஷயம். இன்றைக்கு இருக்கும் ஜனநாயக அடிப்படையில், இந்த நிர்வாக அமைப்பை போதிய அளவு, உடனடியாக வளர்த்துக்கொள்ள, விரிவாக்கிக் கொள்ள முடியுமா என்று யோசித்துப் பார்க்கும்போது, அதில் ஓரளவுக்கு தான் செய்ய முடியும் என்ற முடிவுக்கு வருகிறோம். அப்படி ஓரளவுக்குச் செய்ய வேண்டுமென்றால், ஓரளவுக்கு இருக்கும் திறமையை எதற்காகப் பயன்படுத்துவது என்று பார்க்க வேண்டியவர்களாக இருக்கிறோம். அப்படிப் பார்க்கும்போது, அடிப்படையாக இருக்கும் தொழில்கள் தனியார் கையில் மாட்டிக் கொள்ளாமல், அவை பொதுத் துறையில், இருக்க வேண்டுமென்ற முறையில், சர்க்கார்த் துறையில் எடுத்துக்கொள்ளவேண்டுமென்று முடிவு செய்து, அந்தப் பாதையிலே நாம் போய்க்கொண்டிருக்கும் போது, அதற்கு நிர்வாக இயந்திரம் போதுமானதாக இல்லை.

ஆகையால் அடிப்படையாக இருக்கும் தொழில்களைப் பொறுத்தவரைக்கும், இருக்கிற அளவுக்குச் செய்தால் போதும், திட்டமிட்ட அளவு போக வேண்டாம் என்று நிறுத்திவிடாமல், தனியார் துறை வளரும்போது, அவர்களும் சில தொழில்களை எடுத்து நடத்த முன்வந்தால், அவர்களையும் அனுமதிக்கிறோம். அம்மாதிரி நிலைமை ஏற்பட்டால் அனுமதிக்கவேண்டியதுதான். ஆனால், அந்த நிலைமையை வேண்டுமென்றே கொண்டு வந்து, தனியார் துறைக்குக் கொடுத்தால் அது வேறு விஷயம். அந்த நிலைமை ஏற்படாது. என்னைப் பொறுத்தவரையில் சொல்வேன்—'முடிந்தாலும் முடியாவிட்டாலும் பொதுத் துறையில்தான் தொழில்கள் வர வேண்டும், தொழில்கள் வராவிட்டாலும் கூட பரவாயில்லை, தனியார்த் துறைக்கு விடக்கூடாது' என்ற வாதத்தை நான் ஒப்புக்கொள்ளத் தயாராயில்லை. அவ்வாறு பார்க்கும்போதுதான், எந்த அளவு நாம் பொதுத் துறையிலே காரியங்களை எடுத்துக்கொள்ள முடியுமோ அந்த அளவு எடுத்துக்கொள்வதோடு, தனியார்த் துறையிலும் அவரவர்கள் கொஞ்சம் பார்க்கட்டும் என்று சொல்லக்கூடிய அளவுக்குக் காரியங்களைச் செய்கின்றோம்.

பஸ் விஷயத்தில் பார்த்தால், திரும்பத் திரும்ப அதன் பேரில் ஒரே நோட்டமாக இருக்கிறது சிலருக்கு. அது எல்லாவற்றையும் சர்க்காரே எடுத்து நடத்தவேண்டுமானால், நமக்கு ஏற்பட்டிருக்கும் அனுபவத்தை வைத்துக் கொண்டு பார்க்கவேண்டும். சென்னை நகரத்தில் பஸ் ட்ரான்ஸ்போர்ட்டை நடத்திக்கொண்டு வருகிறோம். இதில் கிடைத்திருக்கும் அனுபவத்தை வைத்துக்கொண்டு எல்லாப் பக்கத்திலும் எடுத்து நடத்த முடியுமா என்று கொஞ்சம் பொறுப்பு உள்ளவர்கள் யோசித்துப் பார்த்து அதை எடுக்கவேண்டியதாக இருக்கிறது. சென்னை பஸ் ட்ரான்ஸ்போர்ட்டுக்கு வேண்டிய வண்டிகளைக் கட்ட தொழிற்சாலையை அமைத்திருக்கிறோம். அதில் எத்தனை சங்கடங்கள் சென்ற வருஷம் ஏற்பட்டன என்று பார்க்கவேண்டும். பொதுத் துறை என்று வந்தவுடனே சர்க்காரிலே இருக்கும் லாபம் முழுவதும், சர்க்காரிலே இருக்கும் நிதி வசதி முழுவதும், தொழிலாளர்கள் தங்களுடைய வசதிகளுக்காக வேண்டுமென்று கருதுகிறார்கள். அதில் ஆச்சரியப்பட முடியாது. கஷ்டப்பட்டவர்கள் இன்னும் கொஞ்சம் வேண்டுமென்று நினைக்கும்போது இதிலே எத்தனை சங்கடங்கள் ஏற்படுகின்றன என்பதைப் பார்க்கவேண்டும்.

பஸ் ட்ரான்ஸ்போர்ட் நடத்தும்போது, ஒரே இடத்தில் இருந்து பார்க்கக்கூடிய தொழில் அல்ல, அது. ஸ்டீல் ப்ளாண்ட் ஒன்று நிறுவுகிறோம் என்றால், அதை ஒரே இடத்திலிருந்து பார்க்க முடியும். ஆனால், பஸ் மூலை முடுக்குகளில் ஓடவேண்டியது. ஒரு பக்கத்தில் பஸ் ஓடவில்லை, கண்டக்டர் சரியாக நடக்கவில்லை என்றால், "பார்த்தீர்களா, சர்க்கார் பஸ் ஓடுகிற லட்சணத்தை; இவர்களுக்குத் தான் வோட்டுப் போட்டோம்" என்று தேர்தல் மேடையிலே பேசக்கூடியவர்கள் இருக்கிறார்கள். ஆகவே, எந்த அளவு எடுத்துக் கொள்ள முடியும் என்று நம்முடைய சக்தியை

ஆராயக் கடமைப்பட்டிருக்கிறோம். ஒருவேளை அவர்கள் இந்தப் பக்கம் வந்து உட்கார்ந்தவுடனே அந்தச் சக்தி வளர்ந்துவிடும் என்றால், கனம் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் இந்த இடத்தில் வருகிற காலத்திலே அவர்கள் பரிசீலனை செய்யவேண்டிய விஷயம். கனம் அங்கத்தினர்கள் கவனிக்கவேண்டியது இதுதான். உடனடியாக எல்லாவற்றையும் எடுத்துக் கொள்ளும் அளவு நிர்வாகத் திறன் இல்லை, இதைவிட முக்கியமான காரியங்கள் காத்துக் கொண்டிருக்கின்றன, அவைகளுக்கு முதலிடம் கொடுக்கவேண்டியதாக இருக்கிறது என்ற காரணத்தால்தான் இன்றைக்கு பொதுத் துறை, தனியார் துறை என்று பார்க்கும்போது, கொள்கை அளவில் மட்டுமல்ல, காரியங்கள் நடைபெற வேண்டும் என்பதை மனதிலே வைத்துக்கொள்ள வேண்டும். இன்றைக்கிருக்கும் சூழ்நிலையில் எந்த அளவு இரண்டு துறைகளும் பணியாற்ற முடியும் என்பதை மனதிலே வைத்துக்கொள்ள வேண்டும். பொதுத் துறையில் இல்லாவிட்டால் ஒரு காரியமும் வேண்டாமென்று இருப்போமானால், அதற்கு வேறொரு அமைப்பு இங்கே வருவதற்கு, கம்யூனிஸ்டு அமைப்பு வருவதற்கு நாம் உதவி செய்த மாதிரி ஆகும். அப்பொழுது நாம் முடிவு செய்துவிடலாம். கம்யூனிஸ்டு நாடாக ஆக்கவேண்டுமென்ற முடிவுக்கு வந்தால், அந்த முடிவு எடுத்து, நாம் பண்ணும் அளவு பண்ணலாம், இல்லாவிட்டால் இல்லை, என்று புரட்சி, பலாத்காரம் வந்து வேறு விதமாக அமைப்பு எற்படும். அதிலே நாம் எந்த அளவுக்குப் போகிறோமோ அப்பொழுது பார்த்துக் கொள்ளலாம். ஆகையால் தான் இன்றைக்கு இருக்கும் அடிப்படையிலே அதைத் தவிர வேறு முடிவுக்கு வருகிறோம்.

**Sri M. KALYANASUNDARAM** : கம்யூனிஸத்தை ஒழிப்பதுதானே உங்கள் கொள்கை ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : கம்யூனிஸ்டுக் கொள்கை இங்கு வரக்கூடாது என்பதுதான் சர்க்காருடைய கொள்கை. அதைப்பற்றி ஒளிவு மறைவு கிடையாது. அந்தக் கொள்கையில் நம்பிக்கை கிடையாது என்று இங்கு சொல்வது மட்டுமல்ல, எங்கே கேட்டாலும் சொல்வதற்குத் தயாராக இருக்கிறோம். ஒழிப்பது மட்டுமல்ல, கம்யூனிஸ்டு கட்சியை நசுக்கவேண்டுமென்பதும் எங்களுடைய கொள்கை.

**Sri M. KALYANASUNDARAM** : முயற்சி பண்ணிப் பாருங்கள்.

**The Hon. Sri C. SUBRAMANIAM**: முயற்சி பண்ணிப்பார்த்து வெற்றியும் பெற்றிருக்கிறோம். 1952–57-ல் நடந்ததைச் சீர்தூக்கிப் பார்த்தால் அவர்களுக்கே தெரியும், நசுக்கியிருக்கிறோமா இல்லையா என்பது. இன்றைக்கு இருக்கக்கூடிய சூழ்நிலையிலே, இன்றைக்கு இருக்கக்கூடிய அமைப்பில் எந்த அளவுக்கு நாம் முன்னேறிச் செல்லவேண்டுமென்பதை யோசித்துப் பார்த்து, அதற்கான முடிவுகளை நாம் எடுத்திருக்கிறோம்.

**Sri P. S. CHINNADURAI** : ஜனநாயகத்தில் கனம் அமைச்சர் அவர்கள் நசுக்கியதாகச் சொல்லுகிறார்கள். சர்க்கார் நசுக்கவில்லை. மக்கள் நசுக்கியிருக்கிறார்கள்.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : நான் ஒப்புக்கொள்ளுகிறேன் திருத்தத்தை. நான் நசுக்கவில்லை. மக்கள் நசுக்கியிருக்கிறார்கள் என்று அவர்களே சொல்லுகிறார்கள். (குறுக்கீடு) ஜனநாயகத்தில் ஐந்து வருஷத்திற்கு ஒரு முறை சந்தர்ப்பம் கொடுக்கிறோம் மக்களுக்கு நாங்கள். அவர்கள் அதுகூட கொடுக்கவில்லை. (குறுக்கீடு) கூட்டுச் சேரவேண்டுமென்று அவர்கள் நினைத்துக்கொண்டிருக்கிறார்கள்.

**Sri M. KALYANASUNDARAM** : நீங்கள் சேர்ந்ததைவிட கேவலமாக நாங்கள் கூட்டு சேர்ந்துவிட மாட்டோம்.

5th September 1960]

THE HON. SRI C. SUBRAMANIAM : இன்றைக்கு இருக்கக்கூடிய அமைப்பில் நிர்வாக இயந்திரத்தை வைத்துக்கொண்டு, அனுபவத்தை வைத்துக்கொண்டு, எந்த அளவுக்கு எந்தக் காரியங்களைச் செய்ய முடியும் என்பதையெல்லாம் பரிசீலனை செய்துதான் நாம் முடிவு எடுக்கவேண்டி யிருக்கிறது.

அடுத்தபடியாக, பணவீக்கத்தைப்பற்றி குறிப்பிட்டார்கள். முக்கியமாக இதில் விலை உயர்ந்துவிடுகிறது, அந்த விலை உயர்வை தடுப்பதற்காக திட்டமே இல்லாமல் செய்துவிடலாம் என்பது அவர்களுடைய கொள்கை. நான் அதற்கு இன்னொரு மாற்றுக் கொள்கை தான் சொன்னேன். முக்கியமாக தொழிலாளர்களின் பங்கு குறைந்து விடாமல் எப்படிச் செய்வது என்பதைப்பற்றி நான் சொன்னது கலியாணசுந்தரம் அவர்களுக்கு பிடிக்கவில்லை. இதற்கு என்ன ஒரு தத்துவம் கொடுக்கிறார்கள் என்று சொன்னார்கள். ஜனநாயக அடிப்படையிலே இன்றைக்கு மக்கள் எல்லோரும் பங்கு எடுத்துக் கொள்ளக்கூடிய முறையிலே திட்டம் வகுக்கும் பொழுது தத்துவ ரீதியிலிருந்தாலும் சரி, அல்லது நடைமுறையில் எடுத்துக் கொள்ளக்கூடிய நடவடிக்கையாக இருந்தாலும் சரி, அதுவும் யோசித்துப் பார்க்கவேண்டிய ஒன்றுதான் என்பதைத் தான் நான் வலியுறுத்தினேன். நான் சொன்ன திட்டத்தை அப்படியே எடுத்துக் கொள்ளவேண்டுமென்பதில்லை. அதையும் பரிசீலனை செய்து பார்க்கவேண்டும் என்று தான் சொன்னேன்.

ஆகையினால் இன்றைக்கு பணவீக்கத்தை குறைக்கவேண்டும் என்றால், எப்படி குறைக்க முடியும். அதைத் தான் நான் கலியாணசுந்தரம் அவர்களிடம் கேட்க விரும்புகிறேன். அடிப்படையாக இருக்கக்கூடிய பேஸிக் இண்டஸ்டிரீஸ்-க்கு முதல் இடம் கொடுக்கவேண்டுமா, அல்லது கன்ஸ்யூமர் இண்டஸ்டிரீஸ்-க்கு முதல் இடம் கொடுக்கவேண்டுமா ? 'பேஸிக் இண்டஸ்டிரீஸ்'-க்கு முதல் இடம் கொடுக்கவேண்டுமென்று அவர்களால் தான் சொல்ல முடியும். கம்யூனிஸ்டு கட்சிக்காரர்கள்தான் இன்றைக்கு 'பேஸிக் இண்டஸ்ரீஸ்'-க்கு முதல் இடம் கொடுக்க வேண்டும் என்று சொல்ல முடியும். (குறுக்கீடு) அதிலே என்னுடைய வாதத்தைச் சொல்லுகிறேன். பேஸிக் இண்டஸ்டிரீஸ் வேண்டும் என்று அவர்கள் சொல்லுகிறார்கள். பேஸிக் இண்டஸ்டிரீஸ்-க்கு நம்முடைய வசதிகளைக் கொண்டு போய் சேர்த்தோமானால், அந்த அளவுக்கு 'கன்ஸ்யூமர் இண டஸ்டிரீஸ்'-ல் நாம் வசதிகளை போடமுடியாது. ஆகையால் உற்பத்தியாகக் கூடிய பொருள்கள் ஓரளவுக்குத் தான் இருக்கும். அப்படி ஓரளவுக்கு இருக்கக்கூடிய பொருள்களின் விலை உயராமல் இருக்க வேண்டுமென்று சொன்னால் எப்படிச் செய்வது ? அதிகமான சம்பளத்தையும் அவர்களிடத்திலே கொடுத்து, அவர்களுடைய வாங்கும் சக்தியை அதிகப் படுத்தி, இன்னொருபக்கம் 'பேஸிக் இண்டஸ்டிரீஸ்' ஏற்படுத் வேண்டும் அவர்கள் வாங்கக்கூடிய சாமான்களையும் உடனடியாக உற்பத்தி செய்யக்கூடாது என்ற கொள்கையையும் ஒப்புக்கொண்டுவிட்டால், என்ன செய்வது ? கம்யூனிஸ்டு நாடுகளாய் இருந்தால் அங்கே சொன்னதைத்தான் வாங்கவேண்டும், கொடுத்ததைத்தான் சாப்பிடவேண்டும், அதற்கு மேலே ஒன்றும் செய்யக் கூடாது என்று சொல்லிவிடலாம். ஆனால், நம்முடைய நாட்டில் ஜனநாயக அமைப்பில் அம்மாதிரி செய்ய முடியாது. இன்றைக்கு இருக்கக்கூடிய நிலைமையில், கன்ஸ்யூமர் இண டஸ்ட்ரீ கூடாது, விலையும் ஏறக்கூடாது என்று சொன்னால் அது முடியாத காரியம். அதற்காக தொழிலாளர்கள் பங்கை குறைக்க வேண்டும் என்று நான் சொல்லவரவில்லை. அதற்கு பதிலாக அவர்கள் உடனடியாக உபயோகப்படுத்தக்கூடிய பணத்தை குறைத்து, சேமிப்பை அதிகப்படுத்தி, அந்த சேமிப்பை அவர்களுக்கு பின்னாலே பயன்படக்கூடிய முறையில் முதலீடு செய்யும்படி ஒரு யோசனை சொன்னேன். இதில் என்ன தவறு இருக்கிறது ? கலியாணசுந்தரம் அவர்கள் ஏதோ மூடிமறைப்பதற்காக, தொழிலாளர்கள் பேரில் ஒரு பெரிய பளுவை போடுவதற்கு தத்துவ ரீதியாக நான் முயற்சிப்பதாக சொன்னார்கள். அது எப்படி என்பது எனக்கு விளங்கவில்லை. தொழிலாளர்களுக்கு பங்கு வேண்டாம் என்று சொல்லவில்லை. இதன்மூலம் சரியான பங்கை பெறுவதற்கு

ஒரு சூழ்நிலை ஏற்படுத்தலாம். அதே சமயத்தில் அவர்கள் முதலீடு செய்வதிலிருந்தே அவர்கள் பயன் அடையும்போது அவர்களுடைய வாழ்க்கைத் தரம் உயரும். அப்படி அவர்கள் வாழ்க்கைத்தரத்தை உயர்த்திக் கொள்ளும் படியான ஒரு யோசனையைத்தான் சொன்னேன். ஏதோ தத்துவ ரீதியில் தொழிலாளர்கள் மீது ஒரு பளுவை சுமத்தப்பார்க்கிறார்கள் என்று சொன்னார்கள். எதற்கு எடுத்தாலும் ஏழைப்பங்காளி, ஏழைகளை பாதுகாக்கக்கூடியவர்கள் என்று சொல்லக்கூடியவர்கள், தொழிலாளர்களுக்கு ஒரு நல்ல யோசனையைச் சொன்னாலும், "அது ஒரு பெரிய பூச்சாண்டி, தொழிலாளர்களுக்கு மேலும் பளுவை சுமத்துவதற்கு அப்படிச் சொல்லுகிறார்கள்" என்று சொன்னால், அது நாட்டு நன்மைக்காகச் சொல்லுவதாக இல்லை. கட்சி நன்மைக்காக, கட்சி பலத்தை வளர்ப்பதற்காக, மக்களை ஏமாற்றுவதற்காகத் தான் அப்படிச் சொல்லுகிறார்கள் என்று நினைக்கவேண்டியிருக்கிறது. ஆகையினால் தான் இன்றைக்கு நாம் ஒரு முக்கியமான அமைப்பை ஏற்படுத்திக்கொள்ள வேண்டியிருக்கிறது. தொழிலாளர்களுக்கு பங்கு இல்லை என்று சொல்லக்கூடிய சூழ்நிலை மாறி பங்கு கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். நாட்டில் தொழில் வளர்ச்சிக்கு அதனால் பங்கம் ஏற்பட்டு விடாது. நல்ல நிலைமை தான் ஏற்படும். இந்தத் திட்டம் இல்லாவிட்டால் வேறு மாற்றுத் திட்டம் என்ன என்பதை யோசித்து, பரிசீலித்து, அதை ஏற்றுக்கொண்டுதான் ஆகவேண்டும் என்பதை வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, ரீஜனல் டிஸ்பாரிடியைப் பற்றி வலியுறுத்திப் பேசினார்கள். ரீஜனல் டிஸ்பாரிடியைப் பற்றி நான் வலியுறுத்திப் பேசிய போது கைக்கு பலம் இல்லை என்றால், கையை மட்டும் தனியாக எடுத்து அதற்கு பலம் கொடுக்க வேண்டும் என்ற அடிப்படையிலே பேசவில்லை. முழு தேகமும் இருக்கவேண்டும். அதே சமயத்தில் கைக்கும் பலம் வேண்டும், காலுக்கும் பலம் வேண்டும், ஹிருதயத்திற்கும் பலம் வேண்டும். எல்லாப் பகுதிகளுக்கும் பலம் வேண்டும் என்ற முறையில் தான் பேசினேன். கால், கையை வளர்த்துவிட்டு, மூளையை வளர்க்கவில்லை என்றால் பிரயோசனமில்லை. ஹிருதயத்தை மட்டும் வளர்த்தால் பிரயோசனமில்லை. அப்பொழுது மூளையே இருக்காது, ஹிருதயமே இருக்காது. அல்லது மூளையை மட்டும் வளர்த்தால் போதாது, ஹிருதயத்தை மட்டும் வளர்த்தால் போதாது. உறுப்புகள் ஒன்றாக இருந்து, ஒரே தேகமாக இருந்து, எல்லாப் பகுதிகளையும் வளர்க்கவேண்டும். எல்லாப் பகுதிகளையும் வளர்த்துவிட்டு, ஹிருதயம் இல்லாமல் இருந்தால் அல்லது மூளை இல்லாமல் இருந்தால் பிரயோசனம் இல்லை. நாங்கள் சொல்லக்கூடியது பிரிவினை அடிப்படையில் இல்லை. இதைப் பிரிவினை அடிப்படையில் விவாதிக்காமல் . . . .

Sri C. N. ANNADURAI : நீங்கள் சொல்லுகிறமாதிரி பைத்தியக்கார முறையில் யார் செய்திருக்கிறார்கள் ? தலையை வளர்த்துவிட்டு, கையை சூம்ப விட்டு விட்டு, அல்லது காலை மட்டும் வளர்த்துவிட்டு செய்த அப்படிப்பட்ட அறிவாளிகள் யார் ? உங்கள் கட்சியை சேர்ந்தவர்கள் அல்லவா ? அப்பொழுது அதை தடுக்காததற்கு காரணம் என்ன ?

The Hon. Sri C. SUBRAMANIAM : வாஸ்தவம்தான். எங்கள் கட்சிக்காரர்கள் அப்படிச் செய்ததை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். அதற்கு மாற்று யோசனை என்ன என்று கேட்டால், காலை வெட்டி, கையை வெட்டி நாங்கள் தவறு செய்திருந்தாலும், இப்பொழுது எல்லோரும் சேர்ந்து எல்லோரும் பலன் பெறக்கூடிய ஒரு திட்டத்தைச் சொல்லுவது தான் சரியான யோசனை என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். நாங்கள் முன்பு குற்றம் செய்ததற்காக, அவர்கள் இப்பொழுது காலையும், கையையும் தனியாகப் பிரித்து திட்டம் போட யோசனை சொன்னால், அது சரியான யோசனையாகுமா என்பதைத்தான் ஆலோசித்துப் பார்க்கவேண்டும். . . . . . (திரு. மு. கருணாநிதி : பாகிஸ்தான் பிரிக்கப்படவில்லையா ?) அதனால்தான் இத்தனை தகராறுகளும் இன்னும் தீரவில்லை. அதற்காக

8th September 1960] [Sri C. Subramaniam]

இன்னொரு தலை முறைக்கும், நமக்குப் பின்னால் வரக்கூடிய தலைமுறைக்கும் மறுபடியும் இம்மாதிரி பிரச்னையை ஏற்படுத்தி அவர்களை கஷ்டத்திற்கு ஏன் உள்ளாக்கவேண்டும் ? ரீஜனல் டிஸ்பாரிடியை கட்டாயம் போக்கவேண்டுமென்று எதற்காக சொல்லுகிறேன் என்றால், அந்த ஒற்றுமை நிலைப்பதற்காகத் தான். அப்பொழுது தான் உண்மையாகவே நல்ல பலன் இருக்க முடியும். ரீஜனல் டிஸ்பாரிடி இருக்கிற வரையிலே ஒற்றுமை உணர்ச்சி ஓரளவுக்கு பாதிக்கப்படும். ஒற்றுமை உணர்ச்சி பலப்பட வேண்டும் என்ற அடிப்படையில் தான் ரீஜனல் டிஸ்பாரிடி இருக்கக்கூடாது என்று சொல்லுகிறேனே தவிர, பிரிப்பதற்கு அல்ல. எந்த நோக்கத்துடன் இந்தப்பிரச்னை அணுகப்படுகிறது என்பதைப் பார்க்கவேண்டும். அதிலே ஒரு அடிப்படை தத்துவம் இருக்கிறது. " நானும் ரீஜனல் டிஸ்பாரிடி இருக்கக்கூடாது என்று சொல்லுகிறேன். நிதி அமைச்சர் அவர்களும் அதே மாதிரி சொல்லுகிறார்கள். ஆகையினால் அவர் எங்கள் பக்கம் வந்துவிட்டார்கள் " என்று சொல்லுவார்கள். அடிப்படை கருத்து வேற்றுமை இருக்கும்போழுது, ஒன்றுபட்டுவிட்டோம் என்று பெருமைப் பட்டுக்கொள்ளுவதில் பிரயோசனம் இல்லை என்பதைத் தான் அவர்களுக்கு சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இதெல்லாம் ஒரு புறம் இருக்க, இன்றைக்கு நாம் இந்தச் சபையை பொறுத்தவரையில் நம்முடைய ராஜ்யத்தில் என்ன நடக்கப்போகிறது, நம்முடைய ராஜ்யத்தில் என்ன பலன்கள் ஏற்படப்போகின்றன, நாம் எவ்வளவு தூரம் பணியாற்றி வருகிறோம் என்பதை வைத்துக்கொண்டுதான் பரிசீலனை செய்ய வேண்டும். நாம் பெருமைப் பட்டுக்கொள்ளுவதற்காக அல்ல, நாட்டிற்கு நல்லது ஏற்படும், மக்களுக்கு நல்லது ஏற்படும் என்பதுதான் அடிப்படை கருத்து என்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆகையினால் இன்றைக்கு விரிவாக என்னென்ன காரியங்களைச் செய்வதற்கு சாத்தியக் கூறுகள் இருக்கின்றன என்பதை வைத்துக்கொண்டுதான் திட்டம் போட்டிருக்கிறோம். இதிலே போட்டுவிட்டார்கள், நமக்கு வரவேண்டும் என்று சொல்ல முடியாது. ஆராய்ந்து பார்த்து, பரிசீலனை செய்து பார்த்து இந்தத் தொழில்களையெல்லாம் இங்கு ஏற்படுத்துவதற்கு வசதி இருக்கிறது என்று சொல்லவில்லை. மேலாகப் பார்த்த அளவுக்கு இந்தத் தொழில்களை ஏற்படுத்துவதற்கு நமக்கு வசதிகள் இருக்கின்றன. அது நிறைவேற வேண்டுமானால், ஒரு தொழிலை எடுத்து, அதன் நுணுக்கங்களைப் பார்த்து நடவடிக்கை எடுக்க வேண்டியிருக்கிறது. இப்பொழுது பார்க்கிறோம், இங்கே 34 ப்ளஸ் 14 ஆக 48 என்று போட்டிருக்கிறோம். ஆனால், இதில் எல்லாம் வந்து விடும் என்பதற்கில்லை. நாளைக்கு 40 தான் வருகிறது என்றால், 8 ஏன் போச்சு என்று கேட்டால், இன்றைக்கு நமக்குத் தெரிந்த நுணுக்கங்களை வைத்துக் கொண்டுதான் செய்ய வேண்டியிருக்கிறது. நாம் இதில் சேர்க்காத தொழில்களும் வரலாம். நேற்றைக்குக்கூட, இரு நிபுணர்கள் வந்து, இரு வேறு தொழில்கள் ஏற்படுத்த முடியும் என்று சொன்னார்கள். அதைப் பரிசீலனை செய்யுங்கள் என்று அந்தத் தொழில்கள் பற்றி தாற்காலிகமாக ஒரு முடிவுக்கு வந்திருக்கிறோம். ஆகவே, இந்த திட்டங்களுக்கு வெளியிலேயும் தொழில்கள் வரத்தக்க ஏதுக்கள் இருக்கின்றன. இது ஒரு வழி காட்டும் முறையிலே தான் அமைந்திருக்கிறது. இதிலே கூறியிருப்பதெல்லாம் சாத்தியம் என்றோ, இதில் இல்லாதது எல்லாம் சாத்தியம் இல்லையென்றோ சொல்லவில்லை. ஆனால், திரு. அண்ணாதுரை சொல்லியபடி, சில தொழில்களைச் செய்துதான் ஆகவேண்டும். அப்பொழுதுதான் பொருளாதார அடிப்படையில் சில முக்கியமான நலன்களை அடைய முடியும். அதில் கருத்து வேற்றுமை ஒன்றும் இல்லை. இப்பொழுது இரும்புத் தொழில் பற்றி, அவர்கள் வலியுறுத்தியது போல், திரும்பத் திரும்ப வலியுறுத்த வேண்டிய ஒரு விஷயம் அது. பல தொழில்களின் வளர்ச்சி அதன் அடிப்படையில் இருக்கிறது. இப்பொழுது நெய்வேலி நிலக்கரி தோண்டி எடுக்கும் காலத்தில், அதை எந்த அளவுக்கு விரைவாகப் பயன்படுத்த முடியுமோ அந்த முறையில் வேறுபல தொழில்கள் அமைக்கப் படவேண்டும். அதற்கான முயற்சிகள் எடுக்கப் படவேண்டும். ஆகவே, இரும்புக் கனியை சேலத்தில் எவ்வளவு உபயோகிக்க முடியுமோ உருக்க முடியுமோ, அந்த அளவுக்கு, மனித முயற்சியால் எவ்வளவு செய்ய முடியுமோ அந்த அளவுக்குச் செய்யத் தயாராக இருக்கிறோம்,

[Sri C. Subramaniam] [8th September 1960

செய்துகொண்டு இருக்கிறேம் என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்பு கிறேன். உடனடியாக ஏன் செய்யவில்லை, அது எப்படி என்று கேட்டால் கீழ் ஜெர்மனிக்காரர்கள் நமக்கு விரோதியல்ல, அவர்களே சொல்லு கிருர்கள், இன்னும் சில பரீட்சைகள் செய்ய வேண்டும், அதன் பேரில் தான் இன்னின்ன இயந்திரங்கள் வேண்டும் என்பதை நிச்சயிக்க முடியும் என்று. அந்த பரீட்சைகள் வெற்றிபெருமல், இயந்திரங்களின் நுணுக்கங்கள் எப்படியிருக்கவேண்டும் என்று நிர்ணயிக்க முடியாது. ஆகவே இயந்திரங்களை அமைப்பதில், அந்தப் பரீட்சைகள் முடிவுபெருத தால்தான் தடங்கல். முன்பே குறிப்பிட்டேன், இந்தத் தொழில் சம்மந்தமாக பூர்வாங்க நடவடிக்கைகள் எல்லாம் முடிந்து விட்டன. இடம், தண்ணீர் வசதி, போக்குவரத்து வசதி, சாலைகள் அமைப்பது போன்றவைகள் உடனடியாக அமைக்க முயற்சிக ளெல்லாம் எடுக்கப்பட்டு வருகின்றன. இதற்கென்று ஒரு தனி "ஸெல்" இண்டஸ்ட்ரீஸ் டிபார்ட்மெண்டில் ஏற்படுத்தப்பட்டு, ஒரு ஸ்பெஷல் அதி காரியும் போட்டு, ஆவன செய்யப்பட்டு வருகின்றன. மனிதப் பிரயத் தினத்தால் செய்ய வேண்டுவதெல்லாம் நடந்துகொண்டு இருக்கிறது. மற்ற பரீட்சைகளும் நடக்கவேண்டுமாளுல், நிலக்கரி 1,000 டன் வேண்டும், அப்படி நிலக்கரி கிடைக்கும் போதுதான் அதைச் செய்ய முடியும். (ஸ்ரீ சி. என். அண்ணுதுரை : ஸெல் நெய்வேலி கார்பொரேஷனிலா இருக் கிறது? இல்லை, இல்லை இண்டஸ்ரீட்ஸ் டிபார்ட்மெண்டிலேயே தனியாக இருக் கிறது அந்த ஸ்டீல் ப்ளாண்ட் பெருகவேண்டுமானுல், லிக்னைட் தோண்டி யெடுக்கும் அளவுக்குத் தான் அது இருக்கும். தர்மல் ப்ளாண்ட் வரப் போகிறது ; பர்ட்டிலைசர் ப்ளாண்ட், ப்ரிகெடிங் ப்ளாண்ட் இவையும் வந்து விடும். அந்த மூன்றும் வந்தால், அப்பொழுது ஸ்டீலுக்கு நிலக்கரி இல்லாமல் போகும். இன்று எதிர்பார்க்கும் 4.5 மிலியன் டன்கள் போதாது. அதைப் பெரிய அளவுக்கு விரிவு படுத்த வேண்டும். நிபுணர் கள் 6 அல்லது 7 மிலியன் டன்கள் எடுக்கமுடியும் என்று சொல்லுகிருர் கள். இரும்பு தொழிற்சாலை வரும்போது, லிக்னைடில் நல்ல பெருக்கம் இருக்கும். அதற்கு நாங்கள் முதல் இடம் கொடுத்திருக்கிறேம் என்று இந்தச் சபைக்கும், திராவிட முன்னேற்றக் கழகத்தலைவருக்கும் சொல்லிக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக தூத்துக்குடிக்கு பெரிய முக்கியத்துவம் கொடுத்திருக் கிறேம். அதை மூன்றுவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலேயே எடுத்து நடத்திவிட வேண்டும் என்பது நோக்கம். அதில் இன்ஞெரு சங்கடம் இருக்கிறது. சேது சமுத்திரம் என்னவாகிறது என்பது ஒரு பெரிய பிரச்னை. அதோடு இணைக்கப்பட்ட திட்டமாகச் செய்தால், பிற்பாடு எடுத்துக்கொண்டால், அதற்குள் மூன்றுவது திட்டம் தீர்ந்துபோய்விடும். இன்றைக்கும் கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்ஞர்கள். அதை விரைவு பண்ணவேண்டுமென்று. சேது சமுத்திரம் வந்தால்தான் இதை எடுக்க வேண்டுமென்ற நிலைமை இல்லை. மீடியம் போர்ட்ஸ் கமிட்டி பரிசீலனைப் படி தூத்துக்குடி சேது சமுத்திர அடிப்படையில் இல்லை. அதைத் தனிப் பட்ட அளவில் செய்தாலும், வரும்படி வரும் என்று தெரிவித்திருக் கிருர்கள். சேது சமுத்திரம் வந்தால் இணைக்கப்பட்ட திட்டமாகச் செய்ய லாம். இல்லாவிட்டால், தனிப்பட்ட முறையில் மூன்றுவது திட்டக் காலத் திலேயே ஆரம்பிக்கலாம் என்று வலியுறுத்தி வருகிறேன். ஆகையினுல், ஒத்திப் போய்விடும் என்று நினைத்து, அம்மாதிரி விவாதத்திற்கு இடம் கொடுக்கவேண்டாம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். (குறுக்கீடு) தனியாக இருந்தாலும் லாபகரமாக இருக்கும். ரெயில்வே போக்கு வரத்து வசதி பற்றிச் சொன்ஞர்கள். ஒப்புக்கொள்ளுகிறேன் ; ரெயில்வே போதுமான அளவு ஏற்படவில்லை என்பது உண்மைதான். ஆனுல், சில பேர்கள் நினைக்கிருர்கள். பழனி போன்று, எங்கெல்லாம் யாத்திரா மார்க்கங்கள் இருக்கின்றனவோ அவைகளை இணைக்க வேண்டும் என்று. அது போல் கன்யாகுமரிக்கும் திருநெல்வேலிக்கும் ரெயில் இணைக்க வேண்டும் என்கிருர்கள். ஆனுல், நான் வலியுறுத்திச் சொல்ல விரும்பு வது என்னவென்றுல், எங்கெங்கு தொழில்கள் ஏற்படுகிறதோ, ஏற்பட இருக்கின்றதோ, அந்தத் தொழில்களுக்கு ஏற்ப ரெயில் பாதைகளைப் புதிதாகப் போடவோ, அல்லது இரட்டிப்பு செய்ய ஆர்வம் காட்ட

8th September 1960] [Sri C. Subramaniam]

வேண்டும். அந்த அடிப்படையில் பரிசீலனை செய்யவேண்டும். இன்னும் சிலர் நினைப்பார்கள், இது பிற்போக்கான இடம், ஆகவே இங்கே ரெயில் பாதை அமைக்க வேண்டும் என்று. வாஸ்தவம். வசதி இருந்தால், பண்ணலாம். ஆனால், புதிய, புதிய தொழில்கள் ஏற்படும்போது, அவற்றிற்கு இணையாக பாதைகளை அமைக்கத் திட்டம் போட வேண்டியது அவசியமாகிறது. அதற்கு முதல் இடம் கொடுக்கவேண்டியிருக்கிறது. ஆகவே, அந்த அடிப்படையில், புதுப் பாதைகள் அமைக்கவோ, அல்லது இரட்டிப்பு செய்யவோ சிபார்சு செய்தால், அப்படி வலியுறுத்தும்போது, அந்தந்தத் தொழில்களும் சீக்கிரமாக வர ஏதுவாக இருக்கும். ரெயில்வே வர வேண்டும் என்ற நிலைமையும், தொழில் வரவேண்டும் என்ற நிலையும் இணைந்து செல்லும். ஆகவே, இன்றைக்கு ஸ்டீல் ப்ளாண்ட் வரவேண்டும் என்று கூறும்போது, அங்கே ரெயில் வசதிகளும் பெருகவேண்டும் என்பது இரண்டும் இணைக்கப்பட்ட திட்டங்களாக பரிசீலனை செய்ய சௌகரியமாக இருக்கும். தொழில்களுக்கு வாய்ப்பு ஏற்பட்டால், கட்டாயம் ரெயில்வேக்களுக்கும் வசதி ஏற்பட்டே தீரும்.

அடுத்தபடியாக வேலையில்லாத் திண்டாட்டத்தைப் பற்றிக் குறிப்பிடப்பட்டது; இன்றைக்கு வேலையில்லாதவர்களுக்கு வேலை கொடுப்பது என்றால், கதர் நூல் நூற்பதைச் செய்கிறோம்; அதில் நாள் ஒன்றுக்கு ஆறு அணா அல்லது எட்டு அணா கிடைக்கும். ஆனால் அதெல்லாம் போதுமா என்று பார்க்க வேண்டும். உண்மையான வேலை வாய்ப்புகள் கொடுக்க வேண்டும் என்று சொல்லும்போது, வாழ்க்கை வசதி பெருக, குடும்பத்தை நடத்த சௌகரியமாகச் செய்து கொடுத்தால்தான் உண்மையான வேலையாக அது இருக்க முடியும். அதை எப்படி ஏற்படுத்துவது. 1-00 p.m.
இன்றைக்கு ஒருவருக்கு எப்படி வேலை வாய்ப்பு கொடுப்பது என்பதைப் பற்றி யோசிக்க வேண்டியதாக இருக்கிறது. அதற்கு எந்த அளவு முதலீடு செய்ய வேண்டும் என்றும், அப்படி எந்த அளவு செய்தால் வேலை வாய்ப்பு கிடைக்கும் என்பதையும் யோசிக்க வேண்டியதாக இருக்கிறது. அந்த அடிப்படையில் முதலீடு செய்ய வேண்டியதாக இருக்கிறது. அதை நிபுணர்கள் கணக்குப் பார்த்திருக்கிறார்கள். அப்படிக் கணக்குப் பார்த்ததில் சாதாரணமாக வேலை கொடுக்க வேண்டுமானால் குறைந்தது ஏழு ஆயிரம் ரூபாய்க்கு முதலீடு செய்தாக வேண்டும் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். இது ரொம்பவும் கம்மியாக போட்டிருக்கிறார்கள். மற்ற நாடுகளில் அந்த அளவைப் பார்த்தால் குறைந்தது 8,850 ரூபாய் அளவுக்குப் போட்டிருக்கிறார்கள் என்று சொல்லுகிறார்கள். குறைந்தது ஏழாயிரம் ரூபாய் என்று வைத்துக்கொண்டாலும் இன்றைக்கு முதல் திட்டத்தின் மூலமாக ஒரு கோடி பேருக்கு மேல் வேலை கொடுத்திருக்க வேண்டும். அந்த அளவில் திட்டம் போட்டிருந்தோம். அதைப் போலவே இரண்டாவது திட்ட காலத்தில் எழுபது லட்சம் பேர்களுக்கு வேலை இல்லாத நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அந்தக் கணக்குப்படி பார்த்தால் மூன்றாவது திட்டத்தில் ஒரு கோடி பேர்களுக்கு வேலை வாய்ப்பு கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. அப்படிக் கொடுத்தால்தான் வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்கமுடியும். இப்படி ஏழாயிரம் ரூபாய் என்று கணக்குப் போட்டதில்தான் ஒரு கோடி எழுபதாயிரம் பேர்கள் என்ற கணக்கு வந்திருக்கிறது. அந்த அடிப்படையில் பார்த்தால் இன்னும் எவ்வளவு பேர்களுக்கு வேலை வாய்ப்பு கொடுக்க வேண்டியதாக ஏற்படும் என்பதைப் பார்க்க வேண்டும். இனிமேல் புதியதாக வேறு வரப்போகிறது. அதற்கு வேறு முதலீடு செய்ய வேண்டியதாக இருக்கிறது. இப்பொழுது நாம் மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்திற்கு 10,200 கோடி ரூபாய் போட்டிருக்கிறோம். அப்படி போட்டிருப்பது பெரிது இல்லை. வேலையில்லாத் திண்டாட்டத்தை கவனிக்கும்போது உற்பத்தியை வேறு பெருக்க வேண்டியதாக இருக்கிறது, அதை வைத்துக்கொண்டு. அதையும் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும். டேக் ஆப் வேறு இருக்கிறது. அப்படி கணக்குப் பார்த்தால் இந்த அளவு போதாது. அதற்கு மேல் இன்னும் அதிகமாக வேறு வேண்டியதாக இருக்கிறது. இப்பொழுது ஒதுக்கியதை வைத்துக்கொண்டு வேலை வாய்ப்பை மட்டும் கொடுப்பது என்பது அல்ல. எல்லோருக்கும் கல்வி வசதி வேறு செய்து கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. குடிதண்ணீர் வசதி செய்து கொடுக்க

வேண்டியதாக இருக்கிறது. வைத்திய வசதி செய்து கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. இப்படி பல வசதிகளைச் செய்து கொடுப்பதோடு தொழிலில் ஈடுபடுவதற்கும் முதலீடு வேறு செய்ய வேண்டியதாக இருக்கிறது. அதற்கு நாம் கடமைப்பட்டிருக்கிறோம். அந்த வசதிகளை மக்களுடைய சக்தியிலிருந்தும் சமுதாயத்திலிருந்தும்தான் கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. மக்களுடைய சக்தியைத் திரட்டிக் கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. அதற்கு வரி போட்டோ அல்லது கடன் எழுப்பியோ கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. இப்படி எந்த வகையிலாவது கொடுக்க கடமைப்பட்டிருக்கிறோம். ஆனால் எதிர்க்கட்சி தலைவர் சொல்லுகிறார் புது வரிகளைப் போடக் கூடாது என்று. அப்படிப் புது வரிகளைப் போடுவதாக இருந்தால் திட்டங்களே வேண்டாம் என்றும் சொல்லுகிறார்கள். வரி போடாமல் திட்டம் வகுக்க வேண்டும் என்று சொல்வது எந்த விதத்திலும் பொருந்தாது. வரி போடும்போது யாருக்கு வரி போட வேண்டும் என்பதைப் பார்த்துத்தான் போடப்படும். எந்த இடத்தில் எந்த அளவு போடவேண்டுமோ அந்த அந்த அளவுதான் போடப்படும் என்பதைப் பற்றி பரிசீலனை செய்து பார்த்துத்தான் போடப்படும். போடுகிற வரி தாங்கக்கூடிய இடத்தில்தான் போடப்படும். அப்படி தாங்கக்கூடிய அளவில் போடுவதற்குதான் முயற்சி செய்யப்படும். எந்த விதத்திலும் மக்களுக்கு பளுவை வைக்க உத்தேசம் இல்லை. அவர்களுக்கு பளுவை வைப்பதில் பல சங்கடங்கள் ஏற்படுகின்றன. அதிகப்படியாக பளுவை வைத்தால் திட்டங்கள் நிறைவேறாமல் போய்விடுமோ என்றுகூட தோன்றுகிறது. அதனால் மக்களுடைய தாங்கும் சக்தியைப் பார்த்துத்தான் வரி போட வேண்டியதாக இருக்கிறது.

இன்னும் பல கருத்துக்கள் சொல்லப்பட்டன. வோட்டு வாங்குவதற்காக இவைகளெல்லாம் செய்யப்படுகிறது என்று சொல்லுகிறார்கள். வோட்டு வாங்குவதற்காக இப்படிப்பட்ட விதங்களில் மக்களை திருப்தி செய்து அடுத்த தேர்தலில் வோட்டுகள் வாங்குவதற்கு செய்கிறார்கள் என்று சொல்லுகிறார்கள். நாங்கள் செய்யக்கூடிய காரியங்கள் மக்களை திருப்தி செய்ய வேண்டும் என்பதுதான். அப்படிச் செய்து விட்டு அவர்கள் அதை வைத்துக்கொண்டு வோட்டுப் போட்டாலும் போடலாம் போடாமல் இருந்தாலும் இருக்கலாம். அதற்காக அவர்களை அதிருப்தி பண்ண வேண்டும் என்ற எண்ணம் எங்களுக்குக் கிடையாது. மக்களுக்கு திருப்தி அளித்துவிட்டு வோட்டு வாங்குவதில் எவ்வித குறைபாடும் கிடையாது. எந்த விதத்திலாவது மக்களை திருப்திபண்ண வேண்டியதுதான். நாங்கள் செய்யக்கூடிய காரியங்களில் அவர்களுக்கு நம்பிக்கை ஏற்பட வேண்டும் என்ற எண்ணத்தில்தான் எல்லாக் காரியங்களையும் செய்து வருகிறோம். மக்கள் ஒப்புக்கொள்ளக்கூடிய காரியங்களைத்தான் செய்துகொண்டு வருகிறோம். அவர்களுடைய ஒப்புதல் பெற்றுத்தான் திட்டங்களை நிறைவேற்ற முயற்சி எடுத்துக்கொள்ளுகிறோம்.

SRI C. N. ANNADURAI : நல்ல காரியங்களைச் செய்கிறோம் என்று சொல்லிவிட்டு வோட்டு வாங்கிவிட்டு அதன் பிறகு அந்தக் காரியங்களைச் செய்யாமல் சும்மா இருப்பதுதான் கூடாது. அது மக்களை ஏமாற்றுவதாகத்தான் இருக்கும்.

THE HON. SRI C. SUBRAMANIAM : நாங்கள் செய்யக்கூடிய காரியங்களில் மக்களுக்கு திருப்தி இருப்பதால்தான் தொடர்ந்து எங்களை அனுப்புகிறார்கள். மக்களுக்கு நம்பிக்கை வரக்கூடிய அளவில் காரியங்களைச் செய்து வந்தால்தான் எங்களால் தொடர்ந்து வர முடியும். மக்களுக்கு எங்கள்மீது நம்பிக்கை இல்லை என்று நாங்கள் கருதினால் நாங்களே வெளியேறுவதற்கு தயாராக இருக்கிறோம் என்பதில் சந்தேகம் இல்லை.

SRI R. KRISHNASWAMI NAIDU : பொய் பிரசாரம் பண்ணுவது நாட்டிற்கு நல்லதா?

THE HON. SRI C. SUBRAMANIAM : அப்படி அவரவர்கள் பண்ணுகிறார்கள், அதன் பலனை அவரவர்கள் அடைவார்கள்.

8th September 1960] [Sri C. Subramaniam]

இன்னும் பல யோசனைகள் இங்கே சொல்லப்பட்டன. சில சமயங்களில் நாம் பொதுவாகப் பேசுகிறோம். உதாரணமாக பால் பெருக்குத் திட்டத்தைப்பற்றி எதிர்க் கட்சியில் இருக்கக்கூடிய கனம் வி. கே. ராமசாமி முதலியார் அவர்கள் பேசினார்கள். மற்ற இடங்களில் இரண்டு மூன்று கோடி ரூபாய் செலவு செய்தால் இங்கு பத்து லட்சம் ரூபாய்தான் செலவு செய்திருக்கிறார்கள் என்று சொன்னால், எங்கிருந்து அதைப்பார்த்துச் சொன்னார் என்பது தெரியவில்லை. நாம் ஒரு ஸ்கிமை ஒரு கோடி 76 லட்சம் ரூபாய்க்கு எடுத்திருக்கிறோம். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இது வரைக்கும் 108 லட்சம் ரூபாய் செலவழித்திருக்கிறோம். இந்த நிலைமையில் ஒன்றுமே செலவழிக்கவில்லை என்று சொல்வது சரியல்ல. அம் மாதிரி சொல்வது நமக்கும் நல்லது அல்ல, சமுதாயத்திற்கும் நல்லது அல்ல. முதல் ஐந்தாண்டு திட்டத்தில் இருக்கிறதைப் பார்த்தால் பெரிய சாதனையாகச் சொல்லவில்லை. திட்டத்தில் நம்பிக்கை ஏற்படக்கூடிய அளவில் சில காரியங்களைச் சாதித்திருக்கிறோம். மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்தில் எவ்வளவு சாத்தியம், எந்த அளவில் செய்ய முடியும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது வரையில் கிடைத்த அனுபவத்தையும் ஏற்பட்ட குறைகளையும் வைத்துக்கொண்டு அந்த அடிப்படையில் மூன்றாவது திட்டத்தை நிறைவேற்ற வேண்டும் என்று திட்டமிடப்பட்டிருக்கிறது. பழைய குறைகளை வைத்திருக்காமல் பார்த்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஏதாவது தடைகள் இருந்தால் அதையும் நிவர்த்தி செய்து கொள்வதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும். பழைய குறைகளே இன்னும் ஏற்படாமல் பார்த்துக்கொள்ளப்படும். பழைய அனுபவத்தை பயன்படுத்திக் கொண்டு பழைய குறைகள் மீண்டும் ஏற்படாதபடி பார்த்துக்கொண்டு இந்த திட்டத்தை நிறைவேற்றுவதற்காக திட்டமிட்டிருக்கிறோம். அதனால் முன்னேற்றத்திற்கு அறிகுறி இருக்கும் என்று தோன்றுகிறது. பல குறைகளை பல கட்சி அங்கத்தினர்கள் எடுத்துச் சொன்னார்கள். அந்தக் குறைகள் உண்மையான குறையாக இருந்தால் அவைகளை ஏற்றுக்கொள்வதில் ஆட்சேபணை இல்லை. அவைகள் உண்மையாக இருந்தால் அவைகளை நிவர்த்தி செய்வதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும். புதிய குறைகள் உண்மையான குறைகள் ஏற்பட்டு அதை எடுத்துக்கூறினாலும் அதை ஏற்றுக்கொள்ளவும் தயாராக இருக்கிறோம். அந்த முறையில் இந்தத் திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. நல்ல முறையில் அதை செயல் ஆற்ற வேண்டும் என்று இருக்கிறோம். இந்தத் திட்டத்திற்கு நல்ல வளம் தேடுவதற்கு இந்த சபையின இந்த விவாதத்தின் மூலமாக நல்ல முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். பல யோசனைகளை கூறியிருக்கிறார்கள். ஆகவே இந்தத் திட்டத்தை கடைசியில் உருவாக்கி, அதை நிறைவேற்றும் போது இந்த சபையினுடைய முழு ஒத்துழைப்பும் சர்க்காருக்கு இருக்கும் என்ற நம்பிக்கை இருக்கிறது. அப்படி ஒத்துழைப்பு இருக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் உரையை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

அதற்கு முன்பு சில திருத்தங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த திருத்தங்களில் 9-ஆவது திருத்தம் அதாவது ஸ்ரீ கலியாணசுந்தரத்தின் திருத்தம், அதாவது

The hon. Member Sri M. Kalyanasundaram has given a new amendment. I suggest that the words 'and policies' occurring in the last line of the first paragraph of the amendment and the words 'of Kerala and Andhra' occurring in item (2), may be omitted. With the omission of these words, the Government are prepared to accept his amendment.

இதில் கேரளா, ஆந்திரா என்று போட வேண்டிய அவசியம் இல்லை.

**Sri M. KALYANASUNDARAM** : I accept the suggestion.

[8th September 1960

THE HON. SRI C. SUBRAMANIAM : Regarding Sri V. K. Ramaswami Mudaliyar's amendment, I request him not to press his amendment.

கனம் வி. கே. ராமசாமி முதலியார் அவர்கள் சில திருத்தங்களை கொடுத்திருக்கிறார் ஆகையால் இந்தத் திருத்தத்தைச் சர்க்கார் ஏற்றுக்கொள்கிறார்கள். இன்னும் அநேகம்பேர் சில திருத்தங்களைக் கொடுத்திருக்கிறார்கள். அவைகளை ஏற்றுக்கொள்ளாததற்குக் காரணம் அதிலே இருக்கிற கருத்து வேற்றுமையினால் அல்ல; அவசியம் இல்லையென்ற காரணத்தினால் தான் அவைகளை வற்புறுத்த வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன். நம்முடைய கவனம் எல்லாம் ஒருமுகப்பட்டு இருக்க வேண்டும் என்பதற்காக அந்த ஒரு திருத்தத்தை எல்லோரும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும், மற்றவற்றை அவரவர்களே வாபஸ் பெற்றுக்கொள்ள வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : On a point of personal explanation, Sir. கனம் நிதி அமைச்சர் அவர்கள் பதில் சொல்கின்ற நேரத்தில் கம்யூனிஸ்டுக் கட்சியைப் பற்றி . . . . . நசுக்கிவிடுவோம் என்ற தங்கள் உறுதியைக் காட்டியிருக்கிறார்கள் . . . . . அதுவும் நண்பர் சின்னதுரை போன்றவர்கள் ஊன்றுகோல் கொடுக்கும் படியாக ஆகிவிட்டதே, ஒழிக்கவேண்டும் என்பதற்கு முன்னாலே இன்னொருவர் தடியை எடுத்துக்கொடுக்கக்கூடிய நிலைமை—அதுவும் அவர் வெளி நாடு கிளம்புகிற சமயத்தில் ஏற்பட்டுவிட்டதே என்று நினைக்கிறேன். அவர் வெளி நாடு கிளம்புகிற சமயத்தில் நான் வேறு ஒன்றும் சொல்ல விரும்பவில்லை. கம்யூனிஸ்டுக் கட்சியைத் தாக்கினால் சிலபேர்களுடைய செல்வாக்கு இருக்கும் என்றால் தாக்கிவிட்டுப்போகட்டும். அதற்கான சந்தர்ப்பத்தை எடுத்துக்கொள்ளட்டும். ஆனால் வெளிநாடு செல்கிறவர்..அங்கே கம்யூனிஸ்டு கட்சியை ஒழிக்க என்ன திட்டம் மேற்கொண்டார்கள் என்ன ஆயிற்று என்பதையும் கொஞ்சம் கண்டு வரவேண்டும். அவர் அதைத் தெரிந்து கொண்டு திரும்பி வந்த அப்புறம் மற்றவற்றைப் பேசலாம் என்று இத்துடன் விட்டு விடுகிறேன்.

DEPUTY SPEAKER : Is the hon. Member, Sri S. M. Annamalai pressing his amendments?

SRI S. M. ANNAMALAI : I am not pressing, Sir.

The amendments were, by leave, withdrawn.

DEPUTY SPEAKER : As the hon. Member, Sri K. Anbazhagan is not in his seat, his amendment is deemed to have been withdrawn.

The amendment of Sri A. Govindasamy was put and lost.

DEPUTY SPEAKER : I presume that the hon. Member, Sri M. Kalyanasundaram is not moving his amendment.

SRI M. KALYANASUNDARAM : I have moved an amendment yesterday, Sir. But I am not now pressing it.

The amendment was, by leave, withdrawn.

The amendments of Sri T. L. Sasivarna Thevar and Sri K. Sattanatha Karayalar were put and lost.

The amendment of Sri V. K. Ramaswami Mudaliyar was, by leave, withdrawn.

8th September 1960]

SRI M. KALYANASUNDARAM : I agree to my amendment moved to-day being amended as suggested by the Hon. the Leader of the House. The amended amendment will read as follows :—

*Add* at the end the following :—

" and on such consideration this House recommends that the Government should give special emphasis to the following schemes and projects among others :

(1) Steel plant utilizing Salem iron ore and Neyveli lignite;

(2) Inter-State Irrigation Schemes for the utilization of surplus waters of the rivers flowing in adjoining States for mutual benefit;

(3) Development of Tuticorin into Major port as part of the Sethusamudram Project;

(4) Nuclear Power Station for Madras; and

(5) Exploration of oil deposits in the Cauvery Basin and location of a refinery."

DEPUTY SPEAKER : The question is—

*Add* at the end the following :—

" and on such consideration this House recommends that the Government should give special emphasis to the following scheme and projects among others;

(1) Steel plant utilising Salem iron ore and Neyveli lignite;

(2) Inter-State Irrigation Schemes for the utilisation of surplus waters of the rivers flowing in adjoining States for mutual benefit;

(3) Developmetn of Tuticorin into major port as part of the Sethusamudram project;

(4) Nuclear Power Station for Madras; and

(5) Exploration of oil deposits in the Cauvery Basin and location of a refinery."

The amendment was put and carried.

DEPUTY SPEAKER : I shall put the main motion, as amended, to the vote of the House. The question is—

" That the draft outline of the Third Five-Year Plan be taken into consideration and on such consideration this House recommends that the Government should give special emphasis to the following schemes and projects among others :

(1) Steel Plant utilising Salem iron ore and Neyveli lignite;

[8th September 1960

(2) Inter-State Irrigation schemes for the utilisation of surplus waters of the rivers flowing in adjoining States for mutual benefit;

(3) Development of Tuticorin into Major Port as part of the Sethusamudram Project;

(4) Nuclear Power Station for Madras; and

(5) Exploration of oil deposits in the Cavery Basin and location of a refinery.''

The motion as amended was put and carried.

The House will now adjourn and meet again at 8-30 a.m. to-morrow, the 9th September 1960.

The House then adjourned.

## VI. PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

A.—*Statutory Rules and Orders.*—Nil.

B.—*Reports, Notifications and other papers.*

* 71. *Third Five-Year Plan of the Madras State—A Summary (English).*

* 72. *Third Five-Year Plan of the Madras State—A Summary (Tamil).*

* **73.** மூன்றுவது ஐந்தாண்டுத் திட்ட வரவு, சென்னை மாநிலம், பொது விவரம் (அறிக்கைகள்).

* **74.** சென்னை மாநில மூன்றுவது ஐந்தாண்டுத் திட்ட வரைவு—பொது விவரம்.

† **75.** சென்னை மாநில மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டம்—நிதி அமைச்சர், கனம் திரு சி. சுப்பிரமணியம் அவர்களின் உரை .

---

* Placed on the table on the 6th September 1960.

† Placed on the table on the 7th Septmber 1960.